தமிழ் லக்கணம்.

55-3

# எழுதும் முறையும்
# உச்சரிப்பு முறையும்

# தமிழில்

# எழுதுமுறையும்

# உச்சரிப்புமுறையும்.



எழுத்துக்கள் என்று சொல்லப்படுகின்ற மொழி முதற்காரணமாகிய ஒலிவடிவங்களில் சில குறைபட்டிருத்தலாலும், சில மிகைபட்டிருத்தலாலும், தமிழ் நெடுங்கணக்கு சீரின்மை உள்ளது, என்பது நன்றாய்த் தெரிந்த விஷயமே. குறைபட்டிருப்பது எங்ஙனமெனில், சில வரிவடிவங்கள் ஒன்றுக்கு மேற்பட்ட ஒலி வடிவங்களைக் குறிக்கின்றன வாதலாலென்க. மிகை பட்டிருப்பது எங்ஙனமெனில், ஒற்று [illegible]ன் ஒன்றாகவே இருக்கும் ஒலியைக் குறிக்க ஒன்றுக்கு மேற் பட்ட எழுத்துக்கள் பிரயோகத்தில் இருக்கின்றன வாதலாலென்க. உதாரணமாக, க, ச, என்னும் எழுத் துக்களில் ஒவ்வொன்றும் கீழே கிரந்த எழுத்தில் காட்டி யிருக்கின்றபடி மூன்று வெவ்வேறு ஒலிவடிவங்களைக் குறிக்கின்றது:—



| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) க— | (i) | க | (2) ச— | (i) | ச |
| | (ii) | ഗ | | (ii) | ജ |
| | (iii) | ஹ | | (iii) | ശ |

இதே விதமாக, ட, த, ப, என்ற எழுத்துக்களில் ஒவ்வொன்றும் கீழ்க்காட்டியபடி இரண்டு ஒலிவடிவங் களைக் குறிக்கின்றது:—

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| (3) ட— | (i) | ട | (4) த— | (i) | த | (5) ப— | (i) | ப |
| | (ii) | ഡ | | (ii) | ദ | | (ii) | ബ |

இதிலிருந்து பன்னிரண்டு ஒலிவடிவங்களை எழுத்தால் எழுத ஐந்து வரிவடிவங்கள் மாத்திரமே தமிழில் இருக்கின்றனவென்று தெளிவாய்த் தெரிகிறது. மேலும் ஒன்றாகவே இருக்கும் நகர-ஒலியைக் குறிக்க, தமிழில் ந, ன, என்கிற இரண்டு எழுத்துக்கள் இருக்கின்றன. இந்த இரண்டு வரிவடிவங்களும் முதன்முதலில் இரண்டு வெவ்வேறு ஒலிவடிவங்களைக் குறித்திருக்கவேண்டும்; இன்றேல் அவைகளின் உற்பத்திக்குக் காரணம் கண்டுபிடிக்க முடியாது. ஆனால், இப்போது, ஒலியைக்கொண்டு பார்த்தால், அவைகளுள் வித்தியாஸம் கொஞ்சமேனும் தோன்றவில்லை; எனவே, ஒரே ஒலியை எழுத்தால் குறித்துக்காட்ட இரண்டு வடிவங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பது பெறப்படும். இப்படியே ரகர-ஒலியைக் குறித்துக்காட்டத் தமிழில் ர, ற, என்னும் இரண்டு வரிவடிவங்கள் இருக்கின்றன. ஆனால், இங்கு இரண்டாவது எழுத்தாகிய வல்லின றகரம் ரகர-ஒலியில் ஓர் வலித்தலைக் காட்டுகின்றது; அஃதன்றியும், இரட்டித்தபோது, வல்லின றகரமானது இந்த ரகர-ஒலியேயன்றி பிறிதோர் ஒலியைக் குறிக்கின்றது. தெலுங்கு பாஷையிலும், ரகர-ஒலியைக் காட்ட இதே விதமாக இரண்டு எழுத்துக்கள் இருக்கின்றன. பழைய கந்நடத்திலும் இந்த மாதிரியான இரண்டு ரகர-எழுத்துக்கள் இருந்தன; ஆனால், புதுக்கந்நடத்தில் வல்லின றகரத்திற்கேற்ற வரிவடிவம் தள்ளிவிடப்பட்டது. அதனால் அப்பாஷையில் யாதொரு கஷ்டமும் உண்டானதாகத் தெரியவில்லை. இவ்விரண்டு விதமான ரகர-ஒலிகளும் தாய்ப்பாஷையாகிய ஸாமாந்யத் திராவிடத்திலிருந்து வந்திருக்கவேண்டுமென்றும், இவை நாளா

55-3



வர்த்தியில் தமக்குள்ள வித்தியாஸம் நீங்கி ஒன்ருகி விடலாம்போல் தோன்றுகின்றன வென்றும், மேற் சொன்னதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

2. நாகரீகமுள்ள ஜநங்கள் பேசும் பயிற்சி பெற்ற பாஷைகள் எல்லாம் இதர பாஷைகளிலிருந்து தங்களுக்கு வேண்டிய கல்வி மொழிப் பயிற்சிகளைப் பெற்றுக் கொள்ள வேண்டி வருவது எங்கும் ஸகஜந்தான். இதைக் கொண்டே தான், தமிழிலும் இதரபாஷைகளிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட சொற்கள் அநேக மிருக்கின்றன. இங்கிலீஷ் அகராதியில், கிரீக் லாட்டின் பாஷைகளிலிருந்து எடுத்துக்கொள்ளப் பட்ட பதங்கள் சுத்த ஆங்கிலோ-ஸாக்ஸன் பதங்களைப் பார்க்கிலும் அதிகமாய் இருப்பது போலவே, பூர்ணமான ஒரு தமிழ் அகராதியிலும், ஸம்ஸ்கிருதத்திலிருந்து நேராகவோ அல்லது பிராகிருத பாஷையின் மூலமாகவோ எடுத்துக் கொள்ளப்பட்ட பதங்கள் சுத்த தமிழ்ப்பதங்களைப் பார்க்கிலும் அதிகமாய் இருக்குமென்பது திண்ணம். இது தமிழிற்கும் ஸம்ஸ்கிருதத்திற்கும் நெருங்கி நீடித்த வித்தியாஸம்பந்தம் இருந்திருத்தலினுல் எற்பட்டிருக்கிறது. உள்ளபடியே, இந்தியா தேசத்தில் பிரசாரத்திலிருக்கிற எல்லாப் பாஷைகளிலுமுள்ள நூல்களின் உற்பத்திக்கும் அபிவிருத்திக்கும் ஸம்ஸ்கிருத பாஷையிலுள்ள பயிற்சியே முக்கிய காரணமாக இருந்திருக்கிறது. தென்னிந்தியாவில் திராவிடயக் கூட்டத்தைச் சேர்ந்ததாகச் சொல்லப்படும் பாஷைகளிலுள்ள நூல்களும் இந்தமுறைக்கு விலக்கானவை யல்ல. தென்னிந்தியா பாஷைகளுக்கும் ஸம்ஸ்கிருதத்திற்கும் உண்டான இந்த நெருங்கிய வித்

தியாஸம்பந்தத்தால் ஏற்பட்ட ஒரு பலிதாம்ஸம் என்னவெனில், பயிற்சி பெற்றிருக்கும் திராவிடய பாஷைகளெல்லாம் தத்தமக்குள்ள நெடுங்கணக்கைப் பெருக்கி, கூடியவரையில் அதை ஸம்ஸ்கிருதத்திலுள்ள நெடுங்கணக்குக்கு ஸமானமாகச் செய்துகொள்ள வேண்டியதாயிற்று, என்பதேயாம். இந்த அவசியமான மாறுதலை உண்டாக்கிக் கொள்வதில், கந்நடம், தெலுங்கு, மலையாளம்,ஆகிய மூன்று பாஷைகளும், ஸம்ஸ்கிருதத்திலுள்ள எழுத்துக்கள் முழுமையையும் எடுத்துக்கொண்டு, அவற்றுக்கு மேல் தத்தமக்குத் தனியாக வேண்டியனவாயிருக்கும் ஒலிகளைக் குறிக்கத் தகுந்த எழுத்துக்களையும் கூட்டிக்கொண்டன. ஆனால், அக்ஷரமாலையில் இம்மாதிரியான மாறுதலை உண்டாக்கிக்கொள்ளுவதில், இதர திராவிடயபாஷைகளைப்பார்க்கிலும் தமிழ்மிகவும் பின்தங்கி வந்திருக்கிறது. தமிழ்நாடுகளில் ஸம்ஸ்கிருதத்தை எழுதுவதற்காக கிரந்த அக்ஷரங்கள் நூற்றாண்டுகள் கணக்காக வழங்கிவந்தும், மேலும் தமிழ் எழுத்துகளும் கிரந்த எழுத்துகளும் ஒரேமூலமாக வந்திருக்கக் கூடுமென்று காண்பிக்கத்தக்க ஒற்றுமை அவற்றின் உருவத்தில் புலப்படுவதாயிருந்தும், கிரந்த அக்ஷரங்களில் கேவலம் ஐந்தெழுத்துகளை மாத்திரமே தன் உபயோகத்திற்குத் தமிழ்ப்பாஷை எடுத்துக் கொண்டிருக்கிறது. அவ்வைந்தெழுத்துக்களாவன—ஜ, ஷ, ஸ, ஹ, க்ஷ, என்பவேயாம். என்றாலும், தற்காலத்தில் தமிழில், ஶ, ஸ்ரீ, என்னும் கிரந்த எழுத்துக்களுங் கூட உபயோகத்தில் வந்து கொண்டிருக்கின்றன. இவ்வெழுத்துக்களில், ஷ, ஸ, என்னும் இரண்டு அக்ஷரங்கள் மாத்திரமே சுத்த தமிழில் இல்லாத புது ஒலிகளைக்குறிப்பன; ஹ, ஜ, ஶ, என்னும் மூன்று எழு

த்துக்களும் ககர-சகரங்களுக்குத் தமிழ்மொழிகளில் சில விடங்களில் உள்ள ஒலிகளை உடையன; அகம் (அஹம்), அஞ்சு (அஞ்ஜு), அசை (அஸை) என்னும் உதாரணங்கள் இவ்வுண்மையை விளக்கும். ஸ்ரீ, க்ஷ, என்னும் எழுத்துக்கள், கூட்டொலிகளைக் குறிக்க இரண்டு மெய்யெழுத்துகள் ஒன்ருய்க் கூடுவதனுலுண்டாகிய ஸம்யுக்த அக்ஷரங்கள்; இவற்றைத் தமிழ் முறையின்படி ஶ்ரீ என்றும் க்ஷ என்றும் எழுதலாம். ஆகவே, ஷ, ஸ, என்பவை தவிர மற்ற கிரந்த அக்ஷரங்களெல்லாம் ஏற்கனவே மிகைபட்டிருந்த தமிழ் நெடுங்கணக்கைப் பின்னும் மிகைபடுத்துவனவாயின என்பது தெரிகிறது.

3. இவ்விதமாக, ஒருவாற்ருல் குறைபட்டும், ஒருவாற்ருல் மிகைபட்டும் இருக்கிற அக்ஷரங்களைக் கொண்டு, தமிழ்ப்பாஷையில், ஒலியை அநுசரித்தே எழுதுவதாவது, எழுத்தை அநுசரித்தே உச்சரிப்பதாவது இயலாத காரியம். சில அக்ஷரங்கள் மிகை பட்டிருப்பதினுல், எழுதும்போது ஸந்தேகங்களும் எழுத்துமாருட்டங்களும் உண்டாகின்றன. இஃது இங்ஙனமாக, தமிழ்ப் பாஷையில் ஒன்றுக்கு மேற்பட்ட ஒலிகளைக் குறிக்கின்ற சில எழுத்துக்கள் இருப்பதைப் பற்றி, எழுதப்பட்டிருக்கிற பதங்களைச் சரியாய் உச்சரிப்பதில் கஷ்டங்கள் நேரிடுகின்றன. நகர-ஒலியைக் குறிப்பதற்கு ந, ன, என்னும் இரண்டு எழுத்துகள் இருப்பது, தமிழை எழுதும்போதுண்டாகிற கஷ்டத்திற்கு ஒரு காரணமாயிருக்கிறது. இவற்றில் ந என்னும் எழுத்து, 'அண்பல்லடி நாமுடியுறத் தநவரும்' என்னும் நன்னூல் சூத்திரத்தின்படி, மேல்வாய்ப் பல்

வின் அடியை நுனிநாக்கு பொருந்துவதால் உண்டாய் மூக்காலுச்சரிக்கப்படும் மெல்லின வெழுத்து; அது ஙங்ககாம் என வழங்கும்; தமிழ் ஸம்ஸ்கிருதம் ஆகிய இரண்டு பாஷைகளுக்கும் பொதுவாயுள்ளது. மற்றொரு எழுத்தாகிய னகரம் தமிழில் மாத்திரமே காணப்படுகின்றது; அது றன்னகரம் என வழங்கும். மூக்கிலிருந்து பிறந்து அன்பல்லடி நாமுடியுற்று உண்டாகிற தந்நகரத்தின் ஒலியையன்றி பிறிதோர் அநுநாசிகவொலியை அது முதன்முதலில் குறித்திருக்கலாம். ஆகையினுல், ஸம்ஸ்கிருதத்திலிருந்து தமிழில் எடுத்துக்கொள்ளப்பட்ட வடசொற்களை எழுதும்போது, தமிழ் விகுதி இலக்கணத்தின்படியும் புணர்ச்சி விதிகளின்படியும் றன்னகாம் வரவேண்டுமிடங்கள் தவிர, மற்ற இடங்களிலெல்லாம் றன்னகரத்தை உபயோகிக்கவே கூடாது. அகர உயிர், நகரமெய், நகர உயிர்மெய், மகரமெய், ஆகிய எழுத்துகளைக் கூட்டி எழுதுவதால் உண்டாகிற பதத்தை ஆராய்வோம் இந்தப் பதத்தைத் தமிழிலுள்ள இரண்டு நகர-எழுத்துகளைக்கொண்டு அந்நம் என்றும் அன்னம் என்றும் இரண்டு விதங்களில் எழுதலாம். சில தமிழ் அகராதிகளிலும் இவ்விரண்டு பதங்களும் தனித்தனியாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இவைகளின் உச்சரிப்பு ஒன்றேயாயினும், இவற்றை எழுதுவதற்கு வேண்டிய அநுநாசிக வெழுத்துகள் பேதப்பட்டிருக்கின்றன. மேலும் இவை வெவ்வேறு மூலங்களிலிருந்து வந்திருப்பதன்றி, பொருளினும் வித்தியாஸப்படுகின்றன. அந்நம் என்பது வடசொல்; அதன்பொருள் உணவு. அன்னம் என்பது சுத்த தமிழ்ப்பதமாயில்லாவிடில், தமிழ்மயமாக்கப்பட்ட சொல்லாயிருக்கலாம்; அதன்பொருள்

ஹம்ஸம். இந்த உதாரணமானது, ஸம்ஸ்கிருதத்தில் இல்லாத னகரவெழுத்தை அந்தப் பாஷையிலிருந்து நேராக எடுத்துக்கொள்ளப்பட்ட தமிழ்ச் சொற்களில் உபயோகிக்கக் கூடாது, என்னும் எழுத்திலக்கணவிதியை நன்கு விளக்குகின்றது. ஆனால் சில வேளைகளில் தந்நகரம் இருக்கவேண்டிய இடங்களில் எதுகைக்காகச் செய்யுட்களில் றன்னகரம் உபயோகிக்கப்பட்டிருக்கிறதுண்டு; இது ஒரு விதிவிலக்கு. மனம், வனம், முனி, வனிதை, முதலிய வார்த்தைகள், ஐயமில்லாமல் வடசொற்களெனத் தெரிந்திருந்தும், ஸம்ஸ்கிருதத்திலில்லாத றன்னகரத்தைக்கொண்டுசிலவேளையில் எழுதப்படுகின்றன. இப்பதங்களில், முனி என்பது, தமிழில் ஒரு வினைப்பகுதியாய் வரக்கூடியதென்றும், அப்பொழுது அதன்பொருள் கோபித்துக்கொள் என்பது என்றும், அறியத்தக்கது. ஆனால், ஸம்ஸ்கிருதத்திலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட முனி என்னும்பெயர்ச்சொல்லுக்கு மௌனி அல்லது துறவி என்று பொருள். அந்நம் என்கிற உதாரணப்பதம் எழுதப்படும் விதத்தை அநுசரிப்பின், இவ்வார்த்தைமுநிஎன்று தந்நகரத்தைக்கொண்டே எழுதப்படவேண்டும். இப்படியே மேல்காட்டிய உதாரணப்பதங்களெல்லாம் கிரமமாய்த் தந்நகரத்தைக் கொண்டே எழுதப்படவேண்டும்; சில அஸாதாரணமான ஸந்தர்ப்பங்களில் மாத்திரமே றன்னகரத்தை உபயோகிக்கலாம். தந்நகர றன்னகரங்களை உபயோகிக்குமுறையைக்குறித்து யுக்திக்குப் பொருந்தின இந்த விதியை அநுஸரிக்காமலிருப்பதினால், எழுதும்போது பிழையும் எழுத்துக் கலப்பும் உண்டாகின்றன. இப்படியிருக்கையில் இவற்றைக்குறித்துவழக்கில் தழுவப்படுகிற ஒரேவிதி யென்னவென்றால், சொற்களில், அவை தமிழ்ச்சொற்களாயி

னும் சரி, திசைச்சொற்களாயினும் சரி, வடசொற்களாயினும் சரி, றன்னகரம் முதலிடத்தில் வரக் கூடா தென்பது மாத்திரமே. எனவே, அநேக வடசொற்களின் இடையில் றன்னகர வெழுத்தை உபயோகிக்க ஒரு சிறிதும் நியாயமில்லாம லிருந்தும், கேவலம் அஜாக்கிரதை மூலமாய் அந்த எழுத்தை அங்கு அநேகர் உபயோகிக்கின்றனர்; (உ-ம்.) வினயகர், வினியோகம், அனுமதி, அனேகம். இவ்வடசொற்களிலும் இவைபோன்ற வேறு வடசொற்களிலும், ஸம்ஸ்கிருதத்திலில்லாத றன்னகரத்தை உபயோகிக்கக் காரணமேயில்லை; ஸம்ஸ்கிருதத்திற்கும் தமிழிற்கும் பொதுவாகவுள்ள தந்நகரத்தையே இம்மாதிரி சொற்களில் உபயோகிக்க வேண்டும். ஆனால் ஸந்தேகமின்றி வடசொல்லினின்று உண்டாகிய ஆன்மா, கன்மம், என்னும் பதங்களின் இடையில், அவைகளைப் பூர்ணமாய்த் தமிழாக்க, சுத்தமான தமிழ் ஓசை ஏற்பட வேண்டிய நிமித்தம், றன்னகரம் வந்திருக்கிறது; இங்கு தமிழைச்சேர்ந்ததான ஓர் காரணமே ஓர் தமிழொலியை உண்டாக்கி யிருக்கிறது. தமிழ்ச் சொற்களின் ஈற்றில் வருகிற ஙகர-ஒலியெல்லாம் அநேகமாய் விகுதியிலக்கணத்தின்படி அமையவேண்டியிருப்பதால், அவ்விடங்களில் தமிழைச்சேர்ந்த றன்னகரத்தையே உபயோகிக்கவேண்டும். தமிழ்ச்சொல்லாயினும், வடசொல்லாயினும், திசைச்சொல்லாயினும், தமிழில், மொழிக்கு முதலில் வரும் நகர-ஒலியைக் குறிக்க, பொது எழுத்தாகிய தந்நகரத்தை எழுதவேண்டுமாதலாலும், மேலும் மொழிக்கு ஈற்றில் வரும் நகர-ஒலியைக்குறிக்க, தமிழுக்கே உரித்தாயுள்ள றன்னகரத்தை எழுதவேண்டுமாதலாலும், மொழிக்கு

இடையில்வரும் நகர-ஒலிகளைக் குறிப்பதற்கே விதிகளை ஏற்படுத்தி, தக்க ஒழுங்கு செய்யவேண்டியதாயிருக்கிறது. அஜாக்கிரதையினல் தப்பாக எழுதியிருப்பதை இலக்கியமாகக் கொள்ளலாமா? ஸாமாந்யர் தப்பாக உச்சரித்தோ அல்லது தப்பாக எழுதியோ உள்ள வார்த்தைகளைச் சிறந்த இங்கிலீஷ் அகராதி ஒன்றிலேனும் இலக்கியமாக எழுதிக்காட்டிப் பொருள் கூறுவதில்லை யன்றோ? ஆகையினல், அறிவின்மையாலும் அஜாக்கிரதையினலும் தப்பாக எழுதுமவர்களின் வழக்கை நாம் முழுவதும் நிராகரிக்கவேண்டும். தமிழ்ப் பாஷையில் வழங்குகிற சொற்களுக்கு இடையில் வரும் நகர-ஒலிகளைக்குறிப்பதில், அச்சொற்கள் இதர பாஷைகளிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டவைகளாயின், பொதுவாகிய நகர-எழுத்தையும், சுத்த தமிழ்ச்சொற்களாயின், தமிழுக்கே உரியதாகிய னகர—எழுத்தையும் எழுதவேண்டும். இலக்கியமாகவுள்ள சிறந்த நூல்களிலும், அந்நூல் வழக்குகளைத் தழுவி இயற்றப்பட்ட தொடையகராதிகளிலும், தமிழுக்குமாத்திரமே உரித்தாகிய றன்னகரமானது எங்கு மொழிக்கு இடையே உபயோகப்படுத்தப்பட்டுள்ளதோ அத்திசைச்சொற்களும் வடசொற்களுந்தான் இவ்விதிக்கு விலக்கானவை என்று கொள்ளவேண்டும். இவைகளெல்லாங்கூட மரபுவழுவமைதிகளாக மதிக்கப்படவேண்டும்; திருத்தமாய் எழுதும்போது, அவற்றிலும் பொதுவாகிய தந்நகரத்தையே உபயோகிக்கவேண்டும்.

4. இனி, நகர-னகரங்களின் உபயோக விதிகளைப் பற்றி மேற்கூறியதிலிருந்து, ரகர-றகரங்களின் உபயோகத்தை விவரிப்பது எளிதே. வலித்த ரகர-ஒலி ற என்

னும் எழுத்தால் குறிக்கப்படுகின்றது; இது ஸம்ஸ்கிரு தத்தில் இல்லாமல் திராவிடிய பாஷைகளில் மாத்திரம் காணப்படுவதினால், தமிழுக்கே உரிய எழுத்தென்று இங்கு இதைக் கருதலாம்; இது வல்லினறகரம் என வழங்கும். வல்லினத்தைச் சேராத மற்றொரு ரகர-ஒலி (இடையினம்)தமிழுக்கும் ஸம்ஸ்கிருதத்துக்கும் பொது வாயுள்ளது; இது ர என்னும் எழுத்தால் குறிக்கப்படு கின்றது; இதுவே பொது ரகரம்; இடையின ரகாம் எனத் தமிழில் வழங்கும். தமிழ் வழக்கில், இக்காலத் திலுங்கூட,இவ்விரண்டு எழுத்துக்களின் ஒலிகளுக்குள் ள வேற்றுமை பாராட்டப்படுவதினாலும்,இலக்கணவிதி களின்படி றகரம் இரட்டிக்கும் இடங்களில் பிறிதோர் ஒலி அதனால் குறிக்கப்படுவதினாலும், எங்கெந்த இடங் களில் இந்த றகரத்தை எழுதவேண்டுமென்பதை எளி தில் அறிந்து கொள்ளலாம். இதர பாஷைகளிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டுத் தமிழ்ப்பாஷையில் வழங்கி வருகிற பதங்களிலுள்ள ரகர-ஒலியைக் குறிப்பதற்குத் தமிழுக்கு மாத்திரமே உரித்தாகிய வல்லினறகரத்தை உபயோகிக்க நியாயமில்லாதபடியினால், பொதுவாகிய இடையின ரகரத்தையே அதற்கு உபயோகிக்க வேண் டும், என்கிற ஒரு பொது விதியை நியாயமாக ஏற்படுத் தலாம். தமிழில் மொழிக்கு முதலில் வல்லின றகரம் வருவதேகிடையாது; ரகர-எழுத்தை முதலிற்கொண்ட ஸம்ஸ்கிருத வார்த்தைகளை முதன்முதலில் தமிழில் எடு த்துக்கொண்டபோது,'ரவ்விற்கு அம்முதலாம் முக்குறி லும்' என்றபடி, அ, இ, உ என்னும் மூன்றெழுத்து களில் ஒன்றை முதலில் சேர்ப்பது விதி; உதாரணம்— அரங்கம், இரதி, உருசி. ஆனபோதிலும், தற்காலத் தில் மொழிக்கு முதலில் இடையின ரகரத்தை உபயோ

கிப்பது வழக்கில் வந்துவிட்டிருக்கிறது; ரூபாய், ரத்து, ராஜா, ரொட்டி, ராணி, ரொக்கம், ரேகை, ராந்தல், ராத்தல், முதலிய திசைச்சொற்களும் வடசொற்களும் ஸாதாரணமாய்த் தமிழில் வழங்கி வருகின்றன. தொன்றுதொட்டு மரபில் வழங்கிவருகிற சொற்களில் தவிர, இதர ரகராதிச் சொற்களில் ரகாத்திற்குப்பின்னே அகர இகர உகரங்களில் ஒன்றைச் சேர்ப்பது இக்காலத்தில் அஸாதாரணமாயும் கல்விக்காட்சிக்கேற்றதாயும் புலப்படுகின்றது. தமிழ்ச்சொற்களில் ரகர-றகரங்களை உபயோகிப்பதில் மற்றொரு விஷயம் கவனிக்கத் தக்கதாயிருக்கிறது. அதாவது, ஒரேவிதமான உச்சரிப்பையுடைய சில சுத்த தமிழ்ச் சொற்கள், அவைகளிலுள்ள ரகர-ஒலியைக் குறிப்பதற்கு வெவ்வேறு ரகர - எழுத்துகளை உபயோகிப்பதினாலும், அதற்கேற்ப வெவ்வேறு பொருள்களை உடைத்தாயிருத்தலினாலும், வேற்றுமைப் படுகின்றன, என்பதே. உதாரணமாக, உரை (வியாக்கியானம்) - உறை (மூடி), கரை (தீரம், அருகு) -கறை (மாசு) என்கிற இரண்டு ஜதைப்பதங்களில் ஒவ்வொரு ஜதையிலும் ஒன்று இடையினரகரத்தையும், மற்றொன்று வல்லினறகரத்தையும் முறையே கொண்டெழுதப்பட்டிருக்கின்றன. அங்ஙனமின்றேல், அவைகளுக்குள்ள பொருள்களை அவை தரமாட்டா. மேலும் இத்தகைய சில ஜதைப்பதங்களில், பொது ரகரத்தைக்கொண்டெழுதப்பட்ட பதம், வடசொல்லாயும் தமிழ்ச்சொல்லாயும் இருந்து இரண்டு வேறு பொருள்களைத் தருகிற திரிசொல்லாய் இருப்பதுண்டு. உதாரணமாக, கரி-கறி (ஆஹாரவிசேஷம்), பரை-பறை(தமுக்கு) என்னும் ஜதைப்பதங்களைக்கவனிப்போம். இங்கு கரி, பரை, என்கிறபத

ங்கள் சுத்த தமிழ்ச்சொற்களாகவாவது, வடசொற்களாகவாவது இருக்கலாம். கரிஎன்பது தமிழ்ச்சொல்லாயின் அடுப்புக்கரி என்று பொருள்படும்; வடசொல்லாயின், யானை என்று பொருள்படும். அதேவிதமாக பணை என்பது தமிழ்ச்சொல்லா யிருக்கும்போது, ஐந்து மரக்கால் கொண்ட முகத்தலளவைக் குறிக்கும்; வட சொல்லா யிருக்கும்போது சக்தியென்கிற மாதேவியைக் குறிக்கும். இந்த மாதிரியான சொற்களைத் தமிழ் நாட்டில் ஏறக்குறைய எல்லா இடங்களிலும், உச்சரிப்பைக் கொண்டே க்ரமமாய் எழுதுவதற்கு இயலாமல் இருக்கிறது. இதர பாஷைகளிலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்ட பதங்களில் வல்லின றகரத்தை உபயோகிக்கக்கூடாது என்கிற விதி ஒன்று தவிர, எந்த இடத்தில் எந்த ரகர - எழுத்தை உபயோகிக்கவேண்டும் என்பதற்கு வழக்கைத் தவிர்த்து வேறு எவ்வித ஆதாரமும் கிடையாது. சில இலக்கண நூலாசிரியர்கள் வல்லினறகரத்தைக் கொண்டு வழக்கில் எழுதப்பட்டு வருகிற வார்த்தைகளின் தொகுதிகளை அவற்றின் பொருளுடன் மாணாக்கர்களுடைய உபயோகத்திற்காக வெளிப்படுத்தி இருக்கிறார்கள்.

5. ஜ, ஸ, ஹ, என்கிற கிரந்த அக்ஷரங்களைத் தமிழில் சேர்த்துக்கொண்டதினால், அப்பொழுதே மிகை பட்டதாயிருந்த தமிழ்நெடுங்கணக்கு பின்னும் மிகை பட்டது என்று முன்னரே கூறப்பட்டது; இவ்வெழுத்துக்களை உபயோகிப்பதிலும் பலமாதிரியான ஸந்தேகங்களுக்கு இடமுண்டு. ஸம்ஸ்கிருத வார்த்தைகள் ஏராளமாய்த் தமிழில் வழங்கிவந்திருப்பதின் காரணமாக எடுத்துக் கொள்ளப்பட்ட இந்த கிரந்த அக்ஷ

ரங்களை (இவற்றில் ஶ என்னும் எழுத்து ஸமீப காலத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டது) ஸம்ஸ்கிருதத்திலிருந்து பெற்றுக்கொண்ட வார்த்தைகளை எழுதுவதற்கு மாத்திரமே உபயோகிக்க வேண்டும். தமிழ் நெடுங்கணக்கு இப்போதிருப்பதுபோல், பூர்த்தியின்றியும் தக்க ஒலி-ஶாஸ்திர-விதிகளுக்குப்பொருந்தாமலும் இருக்கும் வரையில், இஞ்சி, பிஞ்சு, அஞ்சான், என்னுமவைகளைப்போன்ற சொற்களில் ஜ என்னும் கிரந்த எழுத்தை உபயோகிப்பது தகாது. ஆனால், கசம், குசன், அஞ்சநம், என்னும் வடசொற்களில், ஜ என்னும் கிரந்த எழுத்தை உபயோகிப்பதே பொருந்தும்; பல ஒலி-வடிவங்களையுடைய ச என்னும் தமிழெழுத்தையும் உபயோகிக்கலாம். சரியான எழுத்தியலின்படி எழுதுவதானால், கஜம், குஜன், அஞ்ஜநம், என்றே இப்பதங்களை எழுதவேண்டும். கசம் முதலியவைபோன்ற பதங்களில் சகரத்துக்குள்ள ஜகார - ஒலியைக் குறிப்பதற்காகவே, ஜ என்னும் கிரந்த எழுத்து தமிழால் எடுத்துக்கொள்ளப்பட்டது; தமிழ்ச் சகரத்திற்கு உள்ள ஜகார - ஒலிக்கும் கிரந்த ஜகாரத்திற்குள்ள ஒலிக்கும் ஒரு வித்தியாஸமும் கிடையாது. ஶ, ஹ, என்னும் எழுத்துக்களுக்கும் மேற்கூறிய விஷயங்கள் அவைகளுக்குத்தக்கபடி பொருந்தும். சக்கை முதலிய சுத்த தமிழ்ச்சொற்களில் ஶ என்னும் அக்ஷரத்தை உபயோகிப்பது சரியல்ல; ஆனால் வடசொற்களைத் தமிழில் எழுதும்போது, தமிழ் ச-வையாவது கிரந்த ஶ - வையாவது உபயோகிக்கலாம்; (உ-ம்.) சங்கரன் அல்லது ஶங்கரன். இவ்விரு எழுத்துக்களுக்கும், ஒலிவடிவில் பேதமொன்றும் கிடையாது; இந்த ஶ என்னும் கிரந்த எழுத்தை எடுத்துக்கொண்டதின் நோக்கம், சமத்கா

ரம், சூர்ணம், முதலான வடசொற்களிலுள்ள சகர-எழுத்திற்கு ஒகார-ஒலியை உரிமைப் படுத்துவதுதான் என்று விளங்குகிறது. தமிழில் எடுத்தாளப்படுகின்ற வடசொற்களிலெல்லாம், ஶகார-ஒலியை ஶ என்னும் கிரந்த எழுத்தினாலும், ஜகார - ஒலியை ஜ என்னும் கிரந்த எழுத்தினாலும் குறித்துவிடின், அவ்வகையான சொற்களில் தமிழ்ச் சகரத்தை உபயோகிக்கிற இடங்களிலெல்லாம் அவ்வெழுத்து ஒகார-ஒலியையே குறிக்கும், என்று தெளிவாய் ஏற்படுகின்றது. இறுதியாக ஹ என்னும் கிரந்த எழுத்தைக் குறித்து விசாரித்தால், அகம், நகை, முதலிய தமிழ்ப்பதங்களில் க-விற்கு உள்ள ஹ-ஒலியைக் குறிப்பதற்கு இந்த கிரந்த அக்ஷரத்தை உபயோகிக்கக் கூடாதென்றும், ஹ-ஒலியையுடைய வட சொற்களில் அவ்வொலியைக் குறிக்கும்பொருட்டு கிரந்த அக்ஷரத்தை உபயோகிப்பதே நியாயம் என்றும், அவற்றிலும் தமிழ்க் க-வை உபயோகிப்பது தவறன்று என்றும், அறிந்துகொள்ளலாம். ஆகவே, அஹங்காரம், மஹாதேவன், முதலியவார்த்தைகளிலுள்ள ஹகார-ஒலியை ஹ, க, என்னும் எழுத்துகளில் எதைபாகிலும் கொண்டுகுறிக்கலாம். இவற்றிலும் ஹ என்னும் கிரந்த எழுத்தை உபயோகிப்பதே சிறந்தது. இம்மாதிரியான ஸந்தர்ப்பங்களில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவெனில், வடமொழியிலிருந்து பெற்றுக் கொள்ளப்பட்ட தமிழ்ப் பதங்களை எழுதும் மாதிரியிலிருந்தே அவை சுத்த தமிழ்ச்சொற்களல்ல என்னும் உண்மை விளங்கும்படியாக எழுதுவதுதான் சீரான எழுத்திலக்கணமாகும், என்பதே. ஹ என்னும் கிரந்த எழுத்திற்குள்ள ஒலிக்கும், க என்னும் தமிழ் எழுத்திற்கு சில ஸ்தானங்களிலுள்ள ஹகார-ஒலிக்கும் பேத

முண்டென்று என்னுவது. தவறில்லாத எழுத்தியல் வழியிலேனும், உச்சரிப்புவழியிலேனும் பொருந்தாது. அகம்படியான் என்னும் சுத்த தமிழ்ச்சொல்லையும், அகம்பாவம் என்னும் வடசொல்லையும் கவனிப்போம். இவ்விருபதங்களிலும் க என்னும் ஒரே தமிழ் எழுத்து உபயோகிக்கப்பட்டிருப்பதிலிருந்தே, ஒன்றிலுள்ள ஹ-ஒலி மற்றொன்றிலுள்ள ஹ-ஒலியை ஒத்ததே என்பது போதரும். இந்த இரண்டு பதங்களையும் உச்சரிப்பதில் ககரத்திற்குள்ள ஹ-ஒலியில் ஏதாவது வித்தியாஸமுண்டென்று எவரேனும் நிரூபிக்கமுடியுமா? ஹகாரத்தோடு சேர்ந்திருக்கும் உயிரெழுத்துகளின் உற்பத்திஸ்தாந வித்தியாஸத்தினல் ஹ-ஒலியிலேயே வித்தியாஸங்களுள்ளனவென்று சிலர் மயங்க இடமுண்டு. அகம்பாவம் என்னும் வடமொழியிலுள்ள ஹ-ஒலியை, க என்னும் தமிழ் எழுத்து, ஹ என்னும் கிரந்த எழுத்தைப்போலவே, குறிக்கிறபடியினுலும், இந்த பதத்திலும் அகம்படியான் என்னும் சுத்த தமிழ்ப் பதத்திலும் ககரத்திற்கு ஹ-ஒலி இருக்கிறபடியினுலும், சுத்த தமிழ்ப் பதத்திலுள்ள ககரத்தினுடைய ஹ—ஒலியும் வடமொழிப் பதத்திலுள்ள ஹகாரத்தினுடைய ஒலியும் ஒன்றேயென்று தெளிவாய்ப் புலப்படுகின்றது. ஆகையினல், ஹ என்னும் கிரந்த எழுத்தைத் தமிழில் எடுத்துக்கொண்டதின் நோக்கம், தமிழில் ககரத்திற்குள்ள ஹ-ஒலியல்லாத வேறொரு புதிய ஒலியைக் குறிப்பதற்கல்ல. வடமொழிச் சொற்களில் இந்த ஹகாரவெழுத்தை உபயோகிப்பதனல், அவ்வடசொற்களில் ககரத்திற்கு க, ம என்னும் ஒலிகளை மாத்திரமே குறிக்கும் தன்மை தமிழ்ப்பாஷையில் வழங்கவேண்டும், என்பதைப் புலப்படுத்துவதுதான் அந்நோக்கம்.

6. தமிழெழுத் தியலின்படி எழுதுவதில் கஷ்டங்கள் ஏற்படுவது அதன் நெடுங்கணக்கில் உள்ளவையான சில தமிழெழுத்துகளும் கிரந்த எழுத்துகளும் மிகைபட்டிருத்தலால் மாத்திரமேயல்ல வடமொழிப் பதங்களிலுள்ள ஒலிகளையெல்லாம் குறிக்கும் வல்லமை தமிழிற்கு இல்லாமையால், தமிழில் வழங்கிவருகின்ற அம்மாதிரிபதங்களைத் தவறின்றி எழுதுவதிலும் உச்சரிப்பதிலும் அநேக ஸந்தேகங்கள் உண்டாகின்றன. தமிழைப் பார்க்கிலும், கந்நடம், தெலுங்கு, மலையாளம், ஆகிய பாஷைகள், ஸம்ஸ்கிருத சப்தங்களை விசேஷமாய்ப் பெற்றுக்கொண் டிருக்கின்றன என்னும் விஷயம் இங்கு கவனிக்கத் தக்கது. மேலும், மலையாள பாஷையில், விகுதிகளோடு சேர்ந்த அநேக ஸம்ஸ்கிருத பதங்கள் அந்த விகுதிகளோடு கூடியே எடுத்துக்கொள்ளப்பட்டு அப்பாஷையிலுள்ள உயர்தரச் செய்யுட்களிலுங் கூட உபயோகப்படுத்தப்பட் டிருக்கின்றன. ஆயினும் இந்தப் பாஷைகளிலெல்லாம் வழங்கிவருகின்ற ஸம்ஸ்கிருதபதங்கள், அவை பிராகிருத பாஷையின் வழியாய் எடுத்துக்கொள்ளப்பட்ட காரணத்தினுலாவது, பெற்றுக்கொள்ளும் பாஷையினுடைய ஒலிவன்மையிலுள்ள பேதத்தின் காரணத்தினுலாவது, ஏறக்குறைய ஒலியிலும் உருவத்திலும் மாறுதலை யடைகின்றன. பிராகிருத இலக்கண நூலாசிரியர் வழக்கின்படி, இந்தத் திராவிடய பாஷைகளின் இலக்கண நூலாசிரியர்களும், ஸம்ஸ்கிருதத்திலிருந்து மாறுதலின்றி எடுத்துக்கொள்ளப்பட்ட சொற்களைத் ‡ தத்ஸமம் என்று

---

‡ தத்ஸமம் என்றுல் தனக்குச் சமம், அதாவது, ஒலியிலும் உருவத்திலும் ஸம்ஸ்கிருதத்துக்குச் சமம் என்பது பொருள்.

கூறுவர்; (உ-ம்.) மணி, மேரு, வாயு. இந்த பதங்களைப் பற்றிக் கவனிக்க வேண்டிய முக்கிய விஷயம் யாதெனில், இவ்வாறு தமிழில் வழங்குகின்ற வடமொழியின் பகுதியும், அதன் மூலமாகிய ஸம்ஸ்கிருத பிராதிபதிகமும் ஒன்றேயென்பது. ஆனால், சில வடமொழிச் சொற்கள் தமிழ் விகுதியை மாத்திரமே பெற்று வேறு யாது விதமாயும் மாறுபடாமல் வழங்குகிறதுமுண்டு; (உ-ம்.) கநகம், மாலை. இந்த மாதிரியான வார்த்தைகளையும் கந்நடம் தெலுங்கு என்னும் பாஷைகளின் இலக்கண நூலாசிரியர்களுடைய வழக்கின்படி தத்ஸமம் என்றே கருதவேண்டி இருக்கிறது. வடமொழியிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட சில பதங்கள், தமிழ்ப்பாஷைக்கு இயற்கையான ஒலி-வன்மைக்குள்ளடங்கியேஇருக்கும்படி உபயோகிக்கப்படுவதினால், ஒலியினும் உருவத்திலும் பிரகாசமான மாறுதலை அடைகின்றன. இம்மாதிரி வடமொழிப் பதங்களுக்கெல்லாம் † தத்பவம் என்று பெயரிட்டிருக்கிறார்கள். ஆணை, சத்தம், பிச்சை, வண்ணம், என்கிற பதங்களை உதாரணங்களாக எடுத்துக் கொள்ளலாம். ஒலியை மாத்திரம் உற்று நோக்கினால், இவை சுத்த தமிழ்ப் பதங்களாகவே தோன்றுகின்றன; ஆனால் இப்பதங்கள் ஆஜ்ஞா, ஶப்த, பிக்ஷா, வர்ண, என்கிற வடமொழிச் சொற்களிலிருந்து வந்திருக்கின்றன என்பது திண்ணம். இவை தமிழ்ப் பாஷையில் விசேஷமாய் வழங்குகின்ற தத்பவவார்த்தைகளின் தன்மையைக் காட்ட மிகவும் தகுந்த உதாரணங்களாயிருக்கின்றன. வெளியிலிருந்து பெற்றுக்கொள்ளப்

---

† தத்பவம் என்றால், அதிலிருந்து உண்டானது, அதாவது, ஸம்ஸ்கிருதத்திலிருந்து உண்டானது, என்று பொருள்.

பட்டவையாயினும் இவ்வார்த்தைகள் தமிழுக்குரிய ஒலிகளையே பூர்த்தியாய் அடைந்திருக்கின்றன; ஆகையினால் அவைகளின் ஒலிவடிவம் முழுமையும் தமிழ் மயமாக்கப்பட்டிருப்பதாய்த் தோன்றுகிறது. ஆனால் சில தத்பவ வார்த்தைகளில் ஒலி மாறுதல் அவ்வளவு பூர்த்தியாய் ஆகாமலும் இருக்கிறதுண்டு: (உ-ம்.) ஆத்துமா, கருமம், கலியாணம், விருத்தம். இவை முறையே ஆத்மந், கர்மந், கல்யாண, வ்ருத்த, என்கிற ஸம்ஸ்கிருத சப்தங்களிலிருந்து வந்திருக்கின்றன. மேலும், இவை, ஆன்மா, கன்மம், கண்ணாலம், வட்டம், என்றும், தமிழில் முறையே வழங்குகின்றன. இதை நோக்கின், இந்த ஸம்ஸ்கிருத சப்தங்கள், தத்பவங்களை யுண்டாக்கிக் கொடுப்பதில், முதல்காட்டிய ரூபங்களைப்பார்க்கிலும் அதிகமான மாறுதலை அடையலாம் என்று தானே தென்படுகிறது. இப்படி அதிகமாறுதல்களை அடைந்து தமிழில் வழங்குகிற தத்பவச் சொற்களெல்லாம் ஸம்ஸ்கிருதத்தி லிருந்து பிராகிருதபாஷையின் வழியாய் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்க வேண்டுமென்று ஸாதாரணமாய் நிரூபிக்கமுடியும். தமிழ்ப்பாஷை வடமொழிப் பதங்களைப் பெற்றுக் கொள்ளும் விஷயத்தில், அப்பதங்களைப் பூர்த்தியாய்த் தமிழ் மயமாக்குவது என்றும் அபூர்த்தியாய்த் தமிழ் மயமாக்குவது என்றும் ஆகிய இவ்விரு வழிகளையும் அநுஸரிப்பது அப்பாஷையில் ஸாமாந்யமாய் வழங்கி வரும் முறையாயிருக்கின்றது. ஆகையினால் அரை குறையாய் மாறுதல்களை அடைந்து வழங்கும் வடமொழிப்பதங்களை அர்த்த-தத்பவம் என்றும், முழுமையும் தமிழ்மயமாக்கப்பட்ட வடமொழிப் பதங்களைத் தத்பவம் என்றும் சொல்லுவது உசிதம். மேற்கூறிய

திலிருந்து, தமிழில் வழங்குகிற ஒவ்வொரு தத்பவ வார்த்தையும் இவ்விரு ரூபங்களிலும் வழங்கவேண்டியது அவசியமென்று எண்ணக்கூடாது. சிலவடமொழிப்பதங்கள் தத்ஸமரூபத்தில் மாத்திரமும், சில தத்ஸம, தத்பவ ரூபங்களிலும், சில தத்ஸம, அர்த்த-தத்பவரூபங்களிலும், மற்றுஞ் சில அர்த்த-தத்பவ, தத்பவ ரூபங்களிலும், தமிழில் வழங்கலாம். அர்த்த-தத்ஸமரூபமென்கிறதாகவும் ஒரு ரூபமுண்டென்பது பின்னர்க் கூறப்படும்.

7. உண்மையாகப் பார்க்குங்கால், தமிழ்ப் பாஷையில் உபயோகிக்கப்படும் எல்லாத் தத்ஸம வார்த்தைகளின் எழுத்திலக்கணமும், அப்பாஷைக்கே உரியதான அக்ஷரமாலையின் ஒலிவன்மைக்குள்ளடங்கியபடியே, கூடுமளவு ஸம்ஸ்கிருத பாஷையின் எழுத்திலக்கணத்தை அநுசரித்து வரும். முழுமையும் தமிழ் மயமாக்கப்பட்டவையான தத்பவ வார்த்தைகளின் எழுத்திலக்கணம், சுத்தமான தமிழ்ப் பாஷையின் எழுத்திலக்கண முறைகளையே ஒத்திருக்கும். அர்த்த-தத்பவமென்று சொல்லப்பட்ட வார்த்தைகளின் எழுத்திலக்கணத்தைக் குறித்துத்தான் ஸந்தேஹங்கள் நேரிட இடமுண்டு. முதலாவது, வடமொழியில் ஒத்தோடு கூடின மெய்யெழுத்துகளை யுடைய பதங்களெல்லாம், தமிழில் அர்த்த-தத்பவ ரூபத்தை அடையும்போது, அவ்வொத்தெழுத்துக்க ளிப்பாஷையி லில்லாமையால், தங்களுடைய ஒலியின் ஒத்தை யிழந்துவிடுகின்றன. தமிழ்ப்பாஷையின் அக்ஷரமாலைக்குள்ளதாக முன்னமே காட்டிய அபூர்த்தியைக்கொண்டு தான், தமிழ்ப்பாஷைக்குவரும் தத்ஸம பதங்களெல்லாம் தங்களுக்கு ஸம்ஸ்

கிருத ரூபத்தில் இருக்கும் ஒத்தை இழந்துவிட வேண்டியதா யிருக்கிறது. இக்காரணத்தைக் கொண்டே, மணிப்ரவாளம் என்று சொல்லப்படுகிற ஸம்ஸ்கிருதம் கலந்த தமிழ்நடையிலுள்ள சில ஜைன வைஷ்ணவ கிரந்தங்களைத் திருத்தமாய் ஒத்தெழுத்துக்களோடு கூட எழுதுவதற்கு கிரந்தம் அல்லது தெலுங்கு அக்ஷரங்களை உபயோகிக்கிறார்கள். இரண்டாவது, அர்த்த-தத்பவ ரூபங்கள் உண்டாகும்போது, இதே மாதிரியாக ஸாமாந்யமாய் ஏற்படும் மற்றொரு ஒலிமாறுதல் என்னவென்றால், இரண்டு வெவ்வேறு மெய்யெழுத்துக்கள் கூடி உண்டாகிற ஸம்யுக்த அக்ஷரங்கள் பிரிந்து, இடையில் தகுதியான ஒரு உயிரெழுத்து தோன்றுதலென்பதாகும். ஒரே மெய்யெழுத்து இரட்டித்திருப்பதும், வல்லெழுத்தும் அதற்கினமான மெல்லெழுத்தும் சேர்ந்திருப்பதும், தமிழிற்கியற்கையான ஒலிக்கலப்புகள் தான். இந்த மாறுதல்களை விக்கிநம் என்னும் உதாரணத்திலிருந்து நன்றாக விளக்கிக் காட்டலாம். வி஘்ந என்பது ஸம்ஸ்கிருத ரூபம். அது தமிழில் விக்கிநம் என்றுஆகின்றது. அதாவது, வ என்னும் ஒத்தெழுத்தில் ஒத்து நீங்கிவிட்டது; ஘்ந என்னும் அக்ஷரக்கூட்டம் பிரிந்து இடையில் இகர உயிர் தோன்றியிருக்கிறது. ஒலியில் மாத்திரைக் குறைபாடு இல்லாமல் நிறைநிறைந்திருப்பதற்காக, ஒத்தையிழந்த வ இரட்டித்தது பிள்ளையாருக்கு ஸம்ஸ்கிருதப் பெயராகிய வி஘்நேஶ்வர என்னும் சப்தம் தமிழில் தத்ஸம ரூபத்தில் விக்நேஶ்வரன் என்று வழங்குகின்றது. இது ஈஶ்வர என்னும் ஸம்ஸ்கிருத சப்தத்திற்கு ஈச்சுவரன் என்றும், ஈசுரன் என்றும் உள்ள அர்த்த-தத்பவ, தத்பவ ரூபங்களுக்கேற்ப, விக்கிநேச்சுவரன் என்றும்,

விக்கிநேசுரன் என்றும், இரண்டுவிதமாகத் தத்பவரூபத்தில் வழங்குகின்றது. இந்த மூன்று ரூபங்களில் ஒன்றேனும் இலக்கணவழுவல்ல. ஆனால், விக்நேசுரன், விக்நேச்சுவரன், விக்கிநேச்வரன், என்றுஒருபாகம்தத்ஸமமாயும் மற்றொருபாகம் தத்பவமாயும் கூட்டப்பட்ட ரூபங்களையெல்லாம் வழுக்களென்றே கருதவேண்டும். அங்ஙனமெழுதுவது பெரும்பிழையே ஆகும். இந்த உதாரணம்கூட்டுப்பதமாயிருப்பதால், கூட்டுப்பதங்களில்தான் இம்மாதிரியான பிழைகள் ஏற்படுமே யன்றி தனிப்பதங்களில் ஏற்படுவதற்கு இடமில்லை என்று நினைக்கக்கூடாது. ஸங்யாஸிந் என்னும் ஸம்ஸ்கிருத தனி-சப்தம், தமிழில் ஸங்யாஸி என்று தத்ஸம ரூபத்திலும் ஸந்நியாஸி, சந்நாசி என அர்த்த-தத்ஸம, தத்பவ ரூபங்களிலும் வழங்குகின்றது. இந்த மூன்று ரூபங்களும் இலக்கண விதிகளின்படி சரியாய் அமைந்தனவேயாகும். ஸந்நியாஸி என்னும் அர்த்த-தத்ஸம ரூபத்தை சந்நியாசி என்றும் எழுதலாம்; அதை அப்படிஎழுதித் தமிழில் சகரத்திற்குரிய ஶகார-ஒலியோடு உச்சரித்தால், அது மூல ஸம்ஸ்கிருத பதத்திற்கு வேறொரு தத்பவ ரூபமாக முடியும். இந்த தனி ஸம்ஸ்கிருத சப்தத்தின் உருமாறுபாடுகளிலுங்கூடத் தத்ஸம தத்பவ பாகங்களைக் கலந்தெழுதுவதற்கு இடமிருக்கின்றது. அறிவிலிகள் இந்த வார்த்தையை சங்யாஸி, ஸங்யாசி, ஸந்நியாசி, சந்நியாஸி, ஸந்நாசி, சந்நாஸி, ஸந்நாஸி எனத்தப்பாக எழுதலாம் அப்ராஹ்மண என்னும் மற்றோர் உதாரணத்தை எடுத்துக்கொள்ளுவோம். அதன் பொருள் பிராஹ்மணன் அல்லாதவன், என்றால், பிராஹ்மணத்துவம் நிஷேதிக்கப்பட்ட

வன் என்பது. இந்தபதம், அப்ராஹ்மணன் எனத் தத்ஸமரூபத்திலும், அப்பிராம்மணன் எனத் தத்பவ ரூபத்திலும் வழங்கலாம். ஸுராஹ்மண என்னும் ஸம்ஸ்கிருதசப்தம், பிராம்மணன் என்று மாத்திரமேயன்றி, மகரம் இரட்டிக்காமல் பிராமணன் என்றும் வழங்குவது மரபாதலின், அஸுராஹ்மண என்பதை அப்பிராமணன் என மற்ருேர் தத்பவரூபத்திலும் எழுதலாம். எனவே, அப்ராஹ்மணன், அப்பிராம்மணன், அப்பிராமணன் என்னும் ரூபங்கள் இலக்கணத்துக்குப் பொருந்தியிருக்கின்றன வென்பதும், அப்சாம்மனான், அப்ராமணன், அப்பிராஹ்மணன் என்னும் மூன்று ரூபங்களும் சரியல்லவென்பதும் பெறப்படுகிறது. ஈண்டு, சில நவீன நூலாசிரியர்கள் உபயோகித்திருக்கிற அரசாங்கம் என்னும் அபூர்வபதம் நோக்கற்பாலது. இதன் மூல ஸம்ஸ்கிருதரூபம் ராஜாங்கம். இந்த வார்த்தையை, அது தமிழில் வழங்கும்போது, ஒரு மாறுதலுமின்றி ராஜாங்கம் என்ற தத்ஸமரூபத்திலேயே உபயோகிப்பதற்கு இக்காலத்தில் யாதொரு தடையுமில்லை. ஆனல், எத்தகைய காரணத்தினுலாவது தத்பவரூபத்தை உபயோகிக்கவேண்டுமென்று ஏற்பட்டால், இராசாங்கம் என அந்த முழுப்பதத்தையும் தத்பவப்படுத்தவேண்டுமே யொழிய, ஒருபாகத்தைத் தத்ஸமமாகவும், மற்ருெரு பாகத்தைத் தத்பவமாகவும்சேர்த்து அரசாங்கம் என்று எழுதுவது தப்பு. ராஜா என்னும் ஸம்ஸ்கிருத பதம் அரசு எனத்தத்பவமாவது உண்மையே; ஆனல் அதனேடு அங்கம் என்னும் பதம் சேரும்போது அரசாங்கம் என்ருவதற்கு யாது புணர்ச்சி விதியுளதோ யாமறியோம். அதிக சுதந்திரத்தைப்பாராட்டும் இக்

காலத்து நவீன நூலாசிரியர்களுக்குக்கூட, இலக்கண விதிகளின்படி யன்றியும், கிரமமான வழக்காகிய மரபன்றியும் உள்ள இவ்விதமான குற்றங்கூடிய ரூபங்களை உபயோகிக்க அதிகாரம் யாதேனும் இருப்பதாகச் சொல்லக் காரணம் ஒன்றும் தெரியவில்லை.

8. இனி, தமிழிற்குரிய உச்சரிப்பின்கிரமத்தைக் குறித்து விசாரிப்போம். எந்த அக்ஷர மாலையிலாவது எழுத்துகளுக்குப் பல ஒலிகள் ஏற்பட்டால், அவ்வக்ஷரங்களைக் கொண்டு எழுதும் பாஷையின் உச்சாரணையில் அடிக்கடி ஸந்தேகத்திற்கு அவகாசமுண்டு. தமிழ்ப் பாஷையில் க, ச, ட, த, ப, என்னும் ஐந்து எழுத்துக்கள் பன்னிரண்டு ஒலிகளைக் குறிக்க வேண்டியதாய் இருப்பதால் அப்பாஷையின் உச்சரிப்புக்கிரமத்தைப் பற்றி விசாரிப்பது அவசியமாகும். தமிழில் எழுத்துகளை உண்டாக்கினபோது, ஒவ்வொரு ஒலிக்கும் ஒவ்வொரு எழுத்து ஏன் ஏற்படுத்தப்படவில்லையென்று அறிந்து சொல்ல முடியாது. என்றாலும், சுத்த தமிழ்ச்சொற்களில் இவ்வெழுத்துக்கள் வருமிடங்களில், இடத்துக்கேற்றபடி ஒலிகளை அவை ஒருமுறையே குறிப்பதினால், அவற்றின் உச்சரிப்பைக் குறித்து, சுத்தமான தமிழ்ப்பதங்களில் ஒருவிதமான கஷ்டமும் உண்டாகிறதில்லை. க என்னும் எழுத்தை முதலில் எடுத்துக்கொள்வோம். அது மொழிக்கு முதலிலும், இரட்டித்திருக்குமிடங்களிலும் கிரந்த ககாரத்தின் ஒலியைக் குறிக்கும்; (உ-ம்.) கதவு, மக்கள், பார்க்க. மொழிக்கு இடையிலும் இறுதியிலும் கிரந்த ஹகாரத்தின் ஒலியைக் குறிக்கின்றது; (உ-ம்.) தகுதி, சுடுகை. மேலும் ங் என்ற இனவெழுத்தோடு

சேர்ந்திருக்கும்போது, கிரந்தமகாரத்தின் ஒலியைக் குறிக்கின்றது: (உ-ம்.) தங்கை, பங்கு. இதே விதமாக சகாரத்திற்கும் ஒலி வேறுபாடுகள் உண்டு. தனியாய் வரும்போதெல்லாம் இவ்வெழுத்து ஸகாரத்தின் ஒலியைக் குறிக்கின்றது: (உ-ம்.) சிக்கல், பசுமை, வரிசை. இரட்டித்திருக்கும் இடங்களில் சகார-ஒலியைக் குறிக்கும்: (உ-ம்) பச்சை, மிச்சம், இகழ்ச்சி, எழுச்சி. மேலும் ஞ் என்ற இனவெழுத்தோடு சேர்ந்து வரும்போது ஜகார-ஒலியைக் குறிக்கும்: (உ-ம்.) பஞ்சு, தஞ்சம், மஞ்சள். டகரம் சுத்த தமிழ்ச் சொற்களுக்கு முதலில் வரும் எழுத்தல்ல; ஆகையினால் டகரத்தை முதலில் கொண்டு தமிழில் வழங்கிவரும் பதங்கள் எல்லாம் இதர பாஷைகளிலிருந்து பெற்றுக்கொள்ளப் பட்ட சொற்களே யாகும்; (உ-ம்.) டாணு, டங்கா, டிப்பணி, டமாரம், டோா. இரட்டித்திருக்கும் இடங்களில் தவிர, மற்ற இடங்களிலெல்லாம் ட்கார-ஒலியையே இவ்வெழுத்து குறிக்கின்றது: (உ-ம்) துடுப்பு, திருடன், செவிடு, ஆண்டவன். இரட்டித்திருக்கும் இடங்களில் டகார - ஒலியைக் குறிக்கின்றது: (உ-ம்.) சட்டம், கட்டளை, சுருட்டு. த என்கிற எழுத்து மொழிக்கு முதலில் வரும்போதும், இரட்டித்து வரும்போதும், த - ஒலியைக் குறிக்கின்றது; (உ-ம்.) திங்கள், தெருவு, குத்து, மெத்தை. மற்ற இடங்களில் ஓ - ஒலியைக் குறிக்கின்றது; (உ-ம்.) கதவு, அரிது, முந்திரி. பகரத்தைக் குறித்து ஆராயுங்கால், தமிழ்ச் சொற்களுக்கு இடையில் இவ்வெழுத்து இரட்டிக்காமல் வருவது மிகவும் அஸாதாரணம் என்பது அறியத் தக்கது. மொழிக்கு முதலிலும் இரட்டித் திருக்கும்

இடங்களிலும் பகரம் வ-ஒலியைக் குறிக்கும். (உ-ம்.) படுக்கை, பிள்ளை, அப்பன், உப்பு. அதுவே,ம் என்னும் இனவெழுத்தோடுசேர்ந்து வரும்போது, ப-ஒலியைக் குறிக்கும்: (உ-ம்.) செம்பு, கம்பி, ஆம்பல். மொழிக்கு இறுதியிலுங்கூட ஸாதாரணமாய்ப் பகரத்திற்கு இந்த ப-ஒலியே உண்டு: (உ-ம்.) மார்பு, திரிபு. மேலும் கபோதி, மரபினர், முதலிய சொற்களில் கவனித்துப் பார்த்தால் பகரத்திற்கு வ-ஒலியைக் காட்டிலும் ப-ஒலி அதிகமா யிருப்பதாகத் தோன்றுகிறது. இருபது, சிறுபுலி, முதலிய கூட்டுப் பதங்களில் பகரத்தின் ஒலி பகாரத்தினதைப் பார்க்கிலும் வகாரத்தினதையே ஒத்திருப்பதாகத் தெரியவருகிறது. கூட்டுப்பதங்களினிடையிலேவரும் பகரத்தின் உச்சரிப்பு அவைகளைப் பிரித்துவிட்டால் அதற்கு உள்ளது போலவே இருக்கும். ஆகவே க, ச, ட, த, ப, என்னும் எழுத்துக்களில் ஒவ்வொன்றும் பல ஒலிகளைக் குறிப்பனவா யிருப்பினும், அவற்றின் ஒலி வேறுபாடுகள், சுத்த தமிழ்ப் பாஷையில், முழுதிலும் ஓர்கிரமத்தை அநுசரித்தே வழங்கி வருவதாய் இருக்கின்றன என்று அறியலாம்.

9. தமிழ் எழுத்துகளின் ஒலிபேதங்களைப்பற்றி உரைக்கப்பட்ட இம்முறையானது, முழுமையும் தமிழ் மயமாக்கப்பட்ட திசைச்சொல் வடசொற்களிலுங்கூட, தக்கபடியே அநுசரிக்கப்படுகின்றது. எனவே, முழுமையும் தமிழ் மயமாக்கப்பட்ட திசைச்சொல் வடசொற்களையெல்லாம், உச்சரிப்பு விஷயத்தில், சுத்த தமிழ்ச் சொற்களாகவே பாவிக்கலாம். ஆனால் எந்த வெளிப்பதங்கள் முழுமையும் தமிழ்மயமாக்கப்பட்டன வென்றும், எவை சிறிது மாறுதலே மாத்திரமேஅடைந்

திருக் கின்றன வென்றும், எவை மாறுதலொன்றும் அடையாமலே இருக்கின்றனவென்றும், மிகவும் ஜாக்கிரதையாய்க் கண்டறிந்து கொள்ளவேண்டியதா யிருக்கிறது. மாறுதலில்லாமல் வழங்குகின்ற வடசொற்களுக்குத் தத்ஸமமென்று பெயரென்றும், ஒலிவேறுபாடடைந்து வழங்குகின்ற வட சொற்களுக்குத் தத்பவமென்று பெயரென்றும், முன்னரேகூறப்பட்டது. தமிழ் அக்ஷரமாலையில் குறைபாடிருப்பதினால், தத்பவ வார்த்தைகளில் எங்ஙனம், அவை ஏற்றக்குறைவாய் ஒலிமாறுதலை அடைவதினால், பூர்ண-தத்பவம், அர்த்த-தத்பவம், என்னும் வித்தியாஸங்கள் ஏற்படுகின்றனவோ, அங்ஙனமே, தத்ஸம வார்த்தைகள் தமிழில் வழங்கும் ரூபங்களிலுங்கூட, அம்மாதிரியான பேதங்கள் உண்டாகின்றன. பின்வரும் உதாரணங்கள் இதையெல்லாம் நன்கு விளக்கும்:—

| | ஸம்ஸ்கிருதபிராதிபதிகம் | தமிழ் உருவம் |
|---|---|---|
| A. தத்ஸமம் | 𑌵𑍇𑌣𑍁 | வேணு |
| | 𑌅𑌗𑍍𑌰 | அக்ரம் |
| | 𑌵𑌿𑌘𑍍𑌨 | விக்நம் |
| B. தத்பவம் | 𑌭𑌦𑍍𑌰 | பத்திரம் |
| | 𑌭𑌿𑌕𑍍𑌷𑌾 | பிச்சை |

மேற்காட்டிய உதாரணபதங்களில் முதலதும் இரண்டாவதுமான வேணு, அக்ரம், என்னும் பதங்களைப் போன்றவைகள் தத்ஸம ரூபங்களாக எண்ணத்தக்கவை யென்று முன்னரே சொல்லப்பட்டது. இவற்றில் முதல் பதமாகிய வேணு என்பதில் ஸம்ஸ்கிருதபிராதிபதிகத்திற்கும் தமிழில் வழங்கும் பகுதி ரூபத்திற்கும்

உருவத்திலும் ஒலியிலும் யாதொரு வித்தியாஸமும் இல்லை. ஆனால் இரண்டாவது உதாரணத்தில், தமிழில் வழங்கும் உருவம், ஸம்ஸ்கிருதப் பகுதிக்கு அம் என்னும் தமிழ் விகுதியைச் சேர்ப்பதினாலாயிற்று. இதில் ஹ-ஒலியை எடுத்துக் காட்டுவதற்காக, ககரவெழுத்து உபயோகிக்கப்பட்டிருப்பதினால், ஒலிவித்தியாஸம் ஏதேனும் உண்டாயிருப்பதாக நினைக்கக் கூடாது; ஏனெனில் ககரத்திற்குத் தமிழ்ப் பாஷையில் ஹ-ஒலியுமுண்டு; மேலும் அவ்வொலியையே அது இவ்விடத்தில் காட்டவேண்டியதாயிருக்கிறது. மூன்றாவது உதாரணமாகிய விக்ஙம் என்னும் பதத்திலோ, வ என்னும் எழுத்து, தமிழில் ஒத்தொலியைக் குறிப்பதற்கு வேண்டிய எழுத்தொன்று மில்லாமையால், ஒத்தை யிழந்து ஹ என்றாகி, ககரத்தினால் குறிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஒத்து கெடுதலினால் ஒலி வேறுபாடு உண்டாகிறதென்பது உண்மையே; ஆனால் ஸம்ஸ்கிருதப் பகுதிக்கும் தமிழ் உருவத்திற்கும் உள்ள ஒற்றுமை இந்த மாறுபாட்டால் அதிகமாகக் கெடுவதில்லை. ஆகையால் இத்தகைய ரூபங்களில் வழங்கும் வடசொற்களை அர்த்த-தத்ஸமம் என்று கூறலாம். நான்காவது உதாரணமாகிய பத்திரம் முதலிய வார்த்தைகளில் மேற்காட்டியதைப் பார்க்கிலும் அதிகமான மாறுபாடுகள் உண்டாயிருக்கின்றன. இம்மாதிரியான சப்தங்களில், முன் நாம் கூறியபடி, ஒத்துள்ள எழுத்துக்கள் ஒத்தை இழப்பதன்றி, இரண்டு வேறு எழுத்துக்கள் கூடுவதாலுண்டான ஸம்யுக்த அக்ஷரங்கள் பிரிந்தும் விடுகின்றன. ஒத்தை யிழப்பதின் காரணமாயுண்டாகும் ஒலிவேறுபாட்டைப் பார்க்கிலும், இம்மாதிரியான மெய்யெழுத்துக்கூட்டப்

பிரிவினுல் உண்டாகும் ஒலிவேறுபாடானது, சுபாவத்தில் அதிகமானதாய்த் தென்படுகிறது. ஆகையினுல் பத்திரம், விக்கிநம், என்பன போன்றவையெல்லாம் அர்த்த - தத்பவ ரூபங்களாகும். அக்கிநி என்பதும், அதன் உற்பத்தியில் ஒத்து ஒன்றும் கெடுவதற்கு இடமில்லாத போதிலும், அர்த்த-தத்பவ பதமேஆகும். அர்த்த-தத்பவ ரூபங்களுண்டாவதற்கு, ஒத்து கெடுதல், ஸம்யுக்த அக்ஷரங்கள் பிரிதல்,ஆகிய இவ்விரண்டுவிகாரங்களொழிய, வேறென்றும் அவசியமில்லை·யென்பது பத்திரம் என்னும் உதாரணத்தின் உச்சரிப்பிலிருந்தே விளங்கும். பத்திரம் என்று எழுதப்பட்ட இப்பதம் ப, த, என்னும் எழுத்துக்களுக்குத் தமிழ்ப்பாஷையில் உள்ள ஒலிகளைக் கொண்டும், அவ்வொலிகள் அந்தந்த ஸ்தாநங்களுக் கேற்றபடி சுத்தத் தமிழ்ப்பதங்களில் வெளிப்பட்டுவரும் முறையைக் கொண்டும், வத்ரம் என்றே உச்சரிக்கப்படவேண்டும். இவ்வாறு உச்சரித்தால் அது ஹஸ்த என்னும் ஸம்ஸ்கிருதப் பகுதியிலிருந்து உண்டானதாக இராது. வஸ்த்ரு என்னும் வேறொருபொருளையுடைய வேறொரு ஸம்ஸ்கிருதப் பகுதியிலிருந்து உண்டான அர்த்த-தத்பவரூபமாகும். உண்மையாய், வஜ்ரம் என்று சொல்லவேண்டிய இடத்தில், அறிந்தவன் எவனும், வத்ரம் என்று சொல்லமாட்டான். ஐந்தாவது உதாரணமாகிய பிச்சை என்பது ஸம்ஸ்கிருதப் பகுதியாகிய பிக்ஷா என்பதின் திரிபு; இதில் ஒலி வேறுபாடுகள் முன்காட்டிய உதாரணங்களெல்லாவற்றிலும் விட அதிகமாய் உண்டாயிருக்கின்றன என்று, சுலபமாய் அறிந்து கொள்ளலாம். ஹ என்பது ஒத்தை இழப்பதோடுகூட வகாரம் ஆயிற்று. க்ஷ

என்னும் துவந்துவ எழுத்து முதலில் க்க என்று ஆகிப் பிறகு ச்ச ஆயிருக்கிறது; ஆ என்னும் ஸ்திரீலிங்க ப்ரத்யயம் ஐ என்னும் தமிழ் விகுதியாக மாறிற்று. முழுமையும் தமிழ் மயமாக்கப்பட்ட வடசொற்களி லெல்லாம் இம்மாதிரியே பூர்ணமான வேறுபாடுகள் நிகழ்ந்திருக்கக் காணலாம். தமிழ்ப்பாஷையில் வழங்கு கின்ற யாதொரு வடசொல்லாவது திசைச்சொல்லா வது, எவ்வளவுதூரம் தமிழ் மயமாக்கப்பட்டிருக்கிற தென்பதை, கேவலம் வெளி மாறுபாடாகிய விகுதி வியத்தியாஸத்தைக் கொண்டே அறிந்துசொல்ல முடி யாது.

10. ஸம்ஸ்கிருத வார்த்தைகள் தமிழ்ப் பாஷை யில் புகுவதில், ஒலியிலும் உருவத்திலும் உண்டா கும் மாறுபாட்டில், மேல்காட்டிய மாதிரி ஐந்துபடிகள் இருப்பதாய்த் தெரியவருகிறது. இங்கு காட்டிய பிர காரம், ஒலியிலும் உருவத்திலும் பூர்ணமான மாறு பாடுகளை அடைந்து, முழுமையும் தமிழ் மயமாக்கப் பட்ட வடசொல் திசைச்சொற்களில் மாத்திரமே, க, ச, ட, த, ப, என்னும் எழுத்துக்களுக்குச் சுத்த தமிழ்ச் சொற்களிலுள்ள ஒலிமுறை பொருந்தும். இந்த உண்மையை அநேக உதாரணங்களைக் கொண்டு விளக் கிக் காட்டலாம். க என்னும் எழுத்தை முதலில் கவ னிப்போம். சுத்த தமிழ்ச் சொற்களின் முதலில் இவ் வெழுத்து க்கார-ஒலியை உடையதென்று சொல்லப் பட்டது; ஆனால் அரை குறையாய்த் தமிழ் மயமாக்கப் பட்ட வடசொற்களின் முதலில், இவ்வெழுத்து மூல ஸம்ஸ்கிருத பதத்தில் எந்த ஒலியைக் குறிக்கவேண்டி யதோ அந்த ஒலியையே தமிழிலுங் காட்டும். இதற்கு

உதாரணமாக கோவளன், கோபாலன், என்னும் பதங்களை எடுத்துக்கொள்வோம். இவ்விரண்டு பதங்களும் ஸம்ஸ்கிருதமூலமாகிய கோபால என்னும் சப்தத்திலிருந்து வந்தவைகள்; இவற்றில் முதற்கூறிய கோவளன் என்பது முழுதும் தமிழ்மயமாக்கப்பட்ட உருவம்; இரண்டாவதாகிய கோபாலன் என்பது ஒலிமாறுபாடொன்றையும் அடையாமல் இருக்கிற உருவம். இவைகளை முறையே, கோவளன். கோவாலன், என்று உச்சரிக்க வேண்டி யிருக்கிறது; இம்முறையை விட்டு கோவளன், கோவாலன், என்று இவற்றை உச்சரிப்பது மிகவும் தப்பாயிருக்கும். இரட்டித்திருக்கும்போது, தமிழ்க் ககரத்திற்கு ககார-ஒலி தான் தமிழில் இருக்குமென்பது நமக்குத்தெரிந்ததே; பூர்ணமாகத் தமிழ்மயமாக்கப்பட்ட வடசொல் திசைச் சொற்களிலும், இது இப்படியே இருக்கும். ஆனல், அபூர்ணமாய்த் தமிழ் மயமாக்கப் பட்ட பதங்களில், இந்த நியமம் தவறுவது முண்டு. அக்நி என்னும் ஸம்ஸ்கிருத பிராதிபதிகம் தமிழில் அக்கினி என்ற அர்த்த - தத்பவ ரூபத்திலும், அக்கி என்ற பூர்ண-தத்பவ ரூபத்திலும் வழங்குகின்றது; இவைகளை முறையே அக்நி என்றும் அக்கி-என்றும் தான் உச்சரிக்க வேண்டும். ககரம் ஙகரத்தோடு சேர்ந்திருக்கும்போது ம - ஒலியைக் குறிக்கும் என்று முன்னரே சொல்லப்பட்டது. ஆனல் தமிழ் பெற்றுக்கொண்டிருக்கும் திசைச்சொல் வடசொற்களில், முழுமையும் தமிழ்மயமாக்கப்பட்ட உருவங்களில் தவிர, வேறெங்கும் இந்த மகார-ஒலி முறையாய் ஏற்படாது. அஹங்கார என்னும் ஸம்ஸ்கிருத பிராதிப்திகம் ஆங்காரம் என்று முழுமையும் தமிழ் மயமாக்கப்பட்ட தத்பவரூபத்திலும், அகங்காரம்

என்று தத்ஸம ரூபத்திலும் வழங்குகின்றது. இவை முறையே ஆங்ஙாரம் எனவும் அஹங்காரம் எனவும் உச்சரிக்கப்படுகின்றன. இந்த ஸந்தர்ப்பத்தில் தத்பவ ரூபமாகிய ஆங்காரம் (ஆங்ஙாரம்) என்னும் பதத்தின் உச்சரிப்பைத் தத்ஸம ரூபமாகிய ஓங்காரம் (ஓங்காரம்) என்னும் பதத்தின் உச்சரிப்போடு ஒத்துப் பார்ப்பது உபகாரகமாயிருக்கும். இப்படியே பங்கஜம் (பங்கஜம்) என்னும் தத்ஸம பதத்தின் உச்சரிப்பை, பங்கயம் (பங்ஙயம்) என்னும் தத்பவரூபத்தின் உச்சரிப்போடு ஒத்துப் பார்ப்பதிலும் பிரயோஜநமுண்டு. மேலும் மொழிக்கு இடையில் வரும் ககரவெழுத்தின் உச்சரிப்பைப்பற்றிக்கூட விசாரிக்கையில், அகாரம் என்னும் தத்ஸம ரூபம் அகாரம் எனவும், அகரம் என்னும் தத்பவ ரூபம் அஹரம் எனவும், உச்சரிக்கப் படுவது ஆழ்ந்து நோக்கற்பாலது. அம்பிகை என்னும் தத்ஸம வடசொல்லின் இறுதியில் ககாரத்திற்குள்ள காரஒலியையும், படுகை என்னும் சுத்த தமிழ்ச் சொல்லின் இறுதியில் அந்த எழுத்திற்கேயுள்ள ஹகார-ஒலியையும் ஒப்பிட்டுப்பார்த்தால், அரைகுறையாய்த் தமிழ்மயமாக்கப்பட்ட தத்பவச்சொற்களினிறுதியிலுள்ள ககாரத்திற்குத் தமிழ் முறையின்படி வரும் ஹகார-ஒலியேயன்றி, வேறு ஒலியும் இருக்கலாமென்று தெரிய வருகிறது. ஆகையால் சுத்த தமிழ்ச் சொற்களில் ககாரத்திற்குள்ள ஒலி வேறுபாடு முறைகள் எல்லாம் முழுமையும் தமிழ்மயமாக்கப்பட்ட தத்பவ வடசொற்களுக்கு மாத்திரமே பொருந்தும் என்றும், அங்ஙனம் முழுமையும் தமிழ்மய மாக்கப்படாத வடசொற்களுக்குப் பொருந்தவே பொருந்தாது என்றும், ஏற்பட்டதாக அறிந்து கொள்ளலாம். தமிழிலுள்ள சகரத்தின்

உச்சரிப்பைப் பற்றி விசாரிக்குங்கால், சாதுரியம் (ஸாதுரியம்), சாந்திராயணம் (ஸாந்திராயணம்), சாட்டியம் (ஜாட்டியம்), சாதகம் (ஜாதகம்), என்னும் அர்த்த - தத்பவ வார்த்தைகளின் உச்சரிப்பை உற்று நோக்கின், சுத்த தமிழ்ச் சொற்களிலும், முழுதும் தமிழ்மயமாக்கப்பட்ட திசைச்சொல் வடசொற்களிலும், மொழிக்குமுதலில்வரும் சகரத்திற்கு, தமிழ்முறையின்படிஉள்ள ஸகார-ஒலியின்றி,மூலஸம்ஸ்கிருத வார்த்தையிலுள்ளபடி, ஸ-ஒலி அல்லது ஜ-ஒலியைக்கூட அச்சகரம் ஏற்றுக்கொள்ளக்கூடியது,என்று நன்குய் விளங்குகிறது. அப்படியே விசயம் (விஜயம்), வசநம் (வஜநம்), கவசம் (கவஜம்), என்னும் தத்ஸம வார்த்தைகளின் உச்சரிப்பிலிருந்து, மொழிக்கு இடையில் வரும் சகரத்தின் ஒலி சுத்த தமிழுக்குள்ள எழுத்தொலிமுறையின்படி அமையாமல், மூல ஸம்ஸ்கிருதப் பதங்களில் அவ்வெழுத்து குறிக்கவேண்டிய ஒலியையே ஒத்திருக்கின்றதென்று ஏற்படுகிறது. லஜ்ஜா என்னும் ஸம்ஸ்கிருதப் பதத்தினின்று வந்த தத்ஸம வார்த்தையாகிய லச்சை யென்பதில் இரட்டித்த சகரத்திற்குள்ள ஜ - ஒலியும், அப்பதத்திற்கே தத்பவ ரூபமாகிய இலச்சை என்பதில் இரட்டித்த சகரத்திற்குள்ள ஸ - ஒலியும், மேற்கூறிய விதிவிஷயமாய் இங்கு கவனிக்கத்தக்க இலக்கியங்களா யிருக்கின்றன. காஞ்சீபுரம் என்னும் தத்ஸம வடசொல்லிலும், சகரம், ஞ் என்னும் இனவெழுத்தோடு கூடி வந்தாலும், சுத்த தமிழ்ச் சொற்களுக்குக்கூறிய எழுத்தொலி முறையின்படி ஜகார-ஒலியைக் குறிக்காமல், மூல ஸம்ஸ்கிருத பதத்தில் இருக்கிறபடி ஸகார-ஒலியையே குறிக்கின்றது.

11. மேலும், சுத்த தமிழ்ச் சொற்களில் டகரம் முதலெழுத்தாக வருவதில்லையென்று முன்னரே கூறப்பட்டது. ஆகையினால், டகரத்தை முதலெழுத்தாகவுடைய திசைச்சொல் வடசொற்களில், அவ்வெழுத்தின் ஒலி, அவைகளுக்கு மூலமாகிய பதங்களின் உச்சரிப்பைத் தழுவி, ட்கரம் அல்லது ஙகரத்தின் ஒலியாக இருக்கலாம். எனவே, டாணு (ட்ாணு), டிப்பணி (டிப்பணி), டங்கா (ஙங்கா), டமாரம்(ஙமாரம்), முதலிய சொற்களை, அவை எந்த பாஷையிலிருந்து எடுத்துக் கொள்ளப் பட்டனவோ, அந்த பாஷையில் அப்பதங்களில் அந்தந்த ஸ்தாநத்தில் டகரத்துக்குப் பதிலாக இருக்கிற எழுத்திற்குள்ள ஒலியைத் தெரிந்துகொண்டு உச்சரிக்கவேண்டும். இதரபாஷைகளிலிருந்து தமிழ்பெற்றுக்கொண்டிருக்கும் வார்த்தைகள், அரைகுறையாய்த் தமிழ்மயமாக்கப்பட்டிருக்கும் பக்ஷத்தில், அச்சொற்களுக்கு இடையிலும் கடைசியிலுங்கூட, தமிழெழுத்தாகிய டகரம் ட்கர ஙகர ஒலிகளிரண்டையும் குறிக்கலாம். (உ-ம்.) ஜடாயு (ஜட்ாயு), கபடம் (கவட்ம்), வடவம் (வஙவம்), மிருடன் (மிருஙன்). இவ்வுதாரணங்களிலுங்கூட, எந்த டகரத்துக்கு எந்த வார்த்தையில் எந்த ஒலி புலப்படவேண்டும், என்பதற்கு மூலமாகிய ஸம்ஸ்கிருதப்பதங்களினுச்சரிப்பே ஆதாரம். ணகாரத்தோடு சேர்ந்து வரும்போது சுத்த தமிழ்ச் சொற்களினுள்ள ஙகார-ஒலி அல்லாமல், ட்கார-ஒலியும் இத் தமிழெழுத்தால் வடசொற்களில் குறிக்கப்படுவதுண்டு: (உ-ம்) கண்டபூர்த்தி (கண்ட்வபூர்த்தி), கண்டாமணி (ஙண்ட்ாமணி). இரட்டித்திருக்கும்போது, ஙகார-ஒலியும் இருக்கிறதுண்டு; (உ-ம்.) ஜாட்டியம் (ஜாஙியம்), மௌட்டியம் (மௌஙியம்). பிராகிருதத்திலிருந்து வந்த வட்

டி, அசட்டை, முதலிய சொற்களின் உச்சரிப்பும் இங்கு கவனிக்கத்தக்கது. டகாரத்திற்குள்ளது போலவே, தகரத்திற்கும் இரண்டு ஒலிகளுண்டு: அவையாவன— கிரந்தத்திலுள்ள தகார-தகார-ஒலிகள் தமிழிற்குள்ள எழுத்தொலிகளின் முறையின்படி, மொழிக்கு முதலில் வரும்போதும், இரட்டித் திருக்கும்போதும், இவ்வெழுத்து தகார-ஒலியையே குறிக்க வேண்டியதாயிருக்கிறது ஆனல், இவ்விதி தத்ஸம, அர்த்த-தத்ஸம, தத்பவ, அர்த்த-தத்பவ வார்த்தைகளில் தப்பாமல் அநுஸரிக்கப்பட்டு வருகிறதில்லை. அவைகளிலெல்லாம் அவ்வெழுத்தின் ஒலி மூல ஸம்ஸ்கிருத பதத்தில் அதன் ஸ்தாநத்திலுள்ளதின் உச்சரிப்பைப் பொருத்திருக்கும்: (உ-ம்) **தே**சம் (𑌦𑍇𑌶ம்), தாநம் (𑌦𑌾𑌨ம்), தாநியம் (𑌧𑌾𑌨𑍍𑌯ம்), யுத்தம் (யு𑌦𑍍𑌧ம்), தரித்திரம் (𑌦𑌰𑌿𑌦𑍍𑌰ம்). இத்தகைய சொற்களில், மொழிக்கு இடைகடைகளில் வரும்போதும், நகரத்தோடு சேர்ந்து வரும்போதும், சுத்த தமிழ்ச் சொற்களில் இருக்கவேண்டிய தகார - ஒலியேயன்றி, தகார- ஒலியும் குறிக்கப்படுவதுண்டு: (உ-ம்.) ஸந்ததி, யந்திரம், தந்திரம். சதாவதாநி என்னும் பதத்தில் ஸம்ஸ்கிருத வார்த்தையில் இருக்கிறபடியே, முதல் தகரத்திற்கு தகார - ஒலியும், இரண்டாவதற்கு தகார-ஒலியும், இருக்கவேண்டியிருக்கிறது. யதிபதி என்னும் பதத்தில் தகரவெழுத்தானது இரண்டுஇடங்களிலும் தகார-ஒலியையே குறிக்கின்றது. கடைசியாக, வகார — பகாரங்களுக்கு உள்ள இரண்டு ஒலிகளையும் புலப்படுத்தும் தமிழ்ப் பகரவெழுத்தின் விஷயத்திலும், மூல ஸம்ஸ்கிருதபதங்களின் உச்சரிப்புத்தான், அரைகுறையாய்த் தமிழ்மயமாக்கப்பட்ட வடசொற்களில் அவ்வெழுத்

திற்குத் தக்க ஒலியை நிச்சயமாய்க் காட்டும். இவ்விடத்தில் பூபதி என்னும் உதாரணத்தைப் பரீக்ஷித்துப் பார்ப்போம். சுத்ததமிழ்ப்பதங்களுக்குள்ள எழுத்தொலிமுறையின்படி, இப்பதம்வ ூவதி என்று உச்சரிக்கப் படவேண்டும். ஆனால் இவ்வார்த்தை அரைகுறையாய்த் தமிழ்மயமாக்கப்பட்ட ஒருவடசொல்லாயிருப்பதினால், அதன் உச்சரிப்பு மூல ஸம்ஸ்கிருத பதத்தின் உச்சரிப்பை அநுஸரித்து ப ூவதி என்று ஆகும். கபி என்று தமிழில் எழுதப்படும் பதத்தின் உச்சரிப்புகவி என்றே ஆகும்; கவி என்று அல்ல. இதேவிதமாக, அப்பியாகதன், அப்பிரகம், முதலிய வார்த்தைகளில் இரட்டித்த பகாரத்தின் உச்சரிப்புங்கூட பகார - ஒலியை யொத்ததாயிருக்கும். இப்பதங்களை அப்பியாகதன், அப்பிரகம், என்று உச்சரிக்கவேண்டும்; அவ்வியாஹதன், அவ்விரஹம் என்று சுத்த தமிழ் எழுத்தொலி முறையின்படி உச்சரிக்கக்கூடாது. சுத்ததமிழ்ச் சொற்களில் மகரத்தோடு சேர்ந்துவரும் பகாரத்திற்கு பகார - ஒலி இருக்கவேண்டும்; ஆனால் வடசொல் திசைச்சொற்களில் இந்த விதியையே எப்போதும் அநுஸரிக்க முடியாது: (உ-ம்.) சம்பகம் (ஸம்பகம்), கம்பிதம் (கம்பிதம்). இவ்விதமான சொற்களில் மகரத்தோடு கலந்துவரும் பகாரத்திற்குச் சில வேளைகளில் மூல பதங்களின் உச்சரிப்பை அநுஸரித்து வகார-ஒலியும் இருக்கலாம்.

12. திராவிடய பாஷைகளுக்குள் ஒன்றாகிய தெலுங்கு பாஷையின் அக்ஷரமாலையில் வகார-ஜகாரங்கள் ஒவ்வொன்றுக்கும் இரண்டு விதமான ஒலிகள் உண்டு,

தெலுங்கு பாஷையிலிருக்கும் அநேகவிதமான பதங்களில், வெவ்வேறு உயிரெழுத்துக்களோடு கூடி இம் மெய்யெழுத்துக்கள் தென்படும்பொழுது, அவைகளுக்குரிய ஒலியைப் பரிசோதித்து அறிந்து கொள்வது, நாம் இப்பொழுது தமிழால் இதரபாஷைகளிலிருந்து பெற்றுக்கொள்ளப்பட்ட பதங்களின் உச்சரிப்பைப் பற்றிச் செய்துவரும் விசாரத்தில், ஸஹாயம் செய்யக் கூடியதாய் இருக்கும். தெலுங்கு பாஷையின் இலக்கண நூல்களில், மேற்கூறிய வகார - ஜகாரங்களுக்கு, தாலவ்ய ஒலியும் தந்த்ய ஒலியும் இருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. தாலவ்யமாய் இருக்கும்பொழுது இவ்வெழுத்துக்களின் ஒலிகள் ஸம்ஸ்கிருதத்தில் இவைகளுக்குள்ள ஒலிகளேயாம். இவைகளின் தந்த்ய ஒலிகள் தெலுங்கில் மாத்திரமே புலப்படுகின்றன. இவ்வொலிகளைத் தெலுங்கர் கிரமமாய்ப் பேசும் வகையைக் கேட்டறிந்து கொள்ளலாம். தந்த்யமான வகாரத்தின் ஒலி த-கார ஸ - காரங்களால் உண்டாகும் கூட்டெழுத்தின் ஒலிக்கு நெருங்கினதாக இருக்கும். அப்படியே ஜகாரத்தின் தந்த்ய ஒலி ஃ-கார ஸ-காரங்களைச் சேர்ப்பதினுல் உண்டாகும் ஒலியை ஒத்திருப்பதாகச் சொல்லலாம். சிறுவருக்கு இவ்விதமான தந்த்ய தாலவ்ய வித்தியாஸங்கள் இவ்வெழுத்துகளுக்கு உண்டென்பதைக் குறித்துக்காட்ட, தாலவ்ய வகார-ஜகாரங்களை ఛ, జ என்றும், தந்த்ய வகார-ஜகாரங்களை ఛ̆, జ̆, என்றும் எழுதுகிறுர்கள். இவ்வெழுத்துகளின் உச்சரிப்பு முறையை நன்ருய் அறிந்தவர்களுக்கு, மேற்காட்டியபடி தந்த்யவித்தியாஸத்தைக்குறிக்கும் குறிப்பு யாதும் வேண்டியதில்லை. அம்முறையாவது—

வகார-ஜகாரங்கள் வெவ்வேறு உயிரெழுத்துக்களோடு சேருவதினல் உண்டாகும் சார்பெழுத்துத் தொடர் களில், చ, చీ, ౘ, ౘీ, జ, జీ, ౙ, ౙీ என்பவைகளுக்கு எப்பொழுதும் தெலுங்கிலுள்ள எல்லா வகைச் சொற் களிலும் தாலவ்ப ஒலியே உளது என்பதும், அத்தொ டர்களிலுள்ள மிகுதியான எழுத்துக்களுக்குச் சுத்த தெலுங்கு பதங்களிலும், தத்பவ பதங்களிலும், தெலு ங்குக்கே உரித்தானதந்த்ய ஒலியும், தத்ஸம பதங்களில் ஸம்ஸ்கிருத ஸமாநமான தாலவ்ப ஒலியும் உள்ளன, என்பதுமேயாம். அதாவது, சுத்த தெலுங்குக்கே உரி யதான இந்த தந்த்ய ஒலியானது சுத்த தெலுங்கு பதங்களிலும் முழுமையும் தெலுங்கு ஆக்கப்பட்டபதங் களிலுந்தான் தோன்றுகின்றது. தெலுங்கு ஆக்கப்படா மலே ஸம்ஸ்கிருதத்திலிருந்து ஏற்றுக்கொள்ளப்பட்ட தத்ஸம பதங்களில் வகார - ஜகாரங்களின் உச்சரிப்பு, ஸம்ஸ்கிருதத்தில் இருப்பதுபோல், எப்பொழுதும் தாலவ்யமாகவே இருக்கும். தெலுங்கு பாஷையில் தமிழில் இருப்பதுபோல அர்த்த - தத்ஸமரூபங்களும் அர்த்த - தத்பவ ரூபங்களும் இருக்க இடமில்லை; ஏனென்றால், தெலுங்கு பாஷையின் அக்ஷரமாலையில் ஸம்ஸ்கிருத பாஷைக்குரிய ஒலிகளை எல்லாம் குறித் துக் காட்டக்கூடிய எழுத்துக்கள் முழுமையும் இருக் கின்றன. இந்த நியமத்தைப் புலப்படுத்திக் காட்டுவ தின் பொருட்டு தெலுங்கு பாஷையில் வழங்கிவரும் தேஶ்ய, தத்பவ, தத்ஸம, பேதங்களைச் சேர்ந்த சில பதங்கள் கீழ் வரும் அட்டவணையில் சேர்த்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

| தேஶ்யம் | தத்பவம். | தத்ஸமம். |
|---|---|---|
| చలి | చలము | చకోరము |
| ([illegible]) | ([illegible]) | ([illegible]) |
| చాడి | చాగము | చాతురి |
| ([illegible]) | ([illegible]) | ([illegible]) |
| చుట్టము | చుక్క | చుబుకము |
| ([illegible]) | ([illegible]) | ([illegible]) |
| చూలాలు | చూరకత్తి | చూడామణి |
| ([illegible]) | ([illegible]) | ([illegible]) |
| ,, | ,, | చైతన్యము ([illegible]) |
| చొప్పు ([illegible]) | ,, | ,, |
| చోటు | చోలా | చోద్యము |
| ([illegible]) | ([illegible]) | ([illegible]) |
| చౌడు | చౌకము | చౌలము |
| ([illegible]) | ([illegible]) | ([illegible]) |
| జబ్బు | జమున | జలము |
| ([illegible]) | ([illegible]) | ([illegible]) |
| జాటి | జాతర | జాతి |
| ([illegible]) | ([illegible]) | ([illegible]) |
| జున్ను | జుట్టు | జుగుప్స |
| ([illegible]) | ([illegible]) | ([illegible]) |

| | | |
|---|---|---|
| జూలు | జూదము | జూటము |
| (ஜூலு) | (ஜூதமு) | (ஜூடமு) |
| | | జైనులు |
| ,, | ,, | (ஜைநுலு) |
| జొల్లు | | |
| (ஜொல்லு) | ,, | ,, |
| జోలి | జోగి | జోనాళము |
| (ஜோலி) | (ஜோகி) | (ஜோநாளமு) |
| జౌకు | జౌవనము | జౌహలు రాణము |
| (ஜௌகு) | (ஜௌவநமு) | (ஜௌஹுராணமு) |

அந்தந்த பாஷைகளின் தன்மைக்குரியவைகளான உச்சரிப்பு விசேஷங்கள் யாதொன்றும், அப்பாஷைகளால் வெளியிலிருந்து பெற்றுக்கொள்ளப்பட்ட பதங்களுக்கு, அப்பதங்கள் தாங்கள் புகுந்த பாஷையின் போலிப்பை முழுதிலும் அடையும் வரையில், ஏற்படமாட்டா என்பது, மேல்காட்டிய அட்டவணையிலிருந்தும் விவரமாய்த் தெரியவருகிறது. ஜர்மநி தேசத்தில் சப்த சாஸ்திரம் தெரிந்தவர்களில் இக்காலத்தில் பேர் பெற்றவர்களில் ஒருவரான டாக்டர் டெல்ப்ருக் (Dr. Delbruck) என்பவர் தமது "Introduction to the Study of Language" (பாஷா விசாரப் பிரவேசம்) என்னும் நூலில்—"பாஷைகளால் வெளியிலிருந்து பெற்றுக்கொள்ளப்பட்டபதங்களின் ஒலியுருவத்தோடு, ஸ்வயத் தன்மையினால் அப்பாஷைகளில் சென்றுவரும் முறைகள் யாதொன்றும் எவ்விதமான ஸம்பந்தமுமுள்ளதாய் இராது"-என்று சொல்லி, தமது அபிப்பிராயத்தைக்கீழ்

வரும் தெளிவான உபமானத்தைக்கொண்டு விளக்கி இருக்கிறார். "மானுட ஜாதிவர்ணனை நூலாசிரியர் ஒருவர் கறுப்புத்தோல் மனிதர்களால் வசிக்கப்பட்டு வந்திருக்கும் ஓர் தேசத்தில் சில வெள்ளைத்தோல் குடும்பங்களைக் கண்டால், இப்படி வித்தியாசமாயிருக்கும் இவர்களை அத்தேசத்தில் பிரபலமாய் இருப்பதாகச் சொல்லப்பட்டகறுப்புத்தோல்காரர்களிலிருந்தே வேறுபாடு பெற்ற மாதிரியாரென்று அந்நூலாசிரியர் வெளியிடமாட்டார். அத்தேசத்துப் பழைமைக் குடிகளின் வர்ணனையில் வெள்ளைத்தோலார் சேர்க்கப்படக்கூடாதென்பதே அவருடைய கருத்தாயிருக்கும். இப்படி புதிதாய்ப் புகுந்த வெள்ளைத்தோல் குடும்பங்களுக்கும் மானுடஜாதி வர்ணனை நூலாசிரியருக்கும் எவ்விதமான ஸம்பந்தம் இருக்கிறதோ, அவ்வித ஸம்பந்தந்தான் பாஷைகளால், ஸமீபத்திலிருந்தாவது தூரத்திலிருந்தாவது, வெளியிலிருந்து பெற்றுக்கொள்ளப்பட்ட பதங்களுக்கும் சப்த சாஸ்திர ஆசிரியருக்கும் உளது, என்பது, என்னுடைய அபிப்பிராயம்". இந்த உபமானம் தக்கவழியில் இரண்டுவிதமாகச் செல்லுகிறதென்பதை இவ்விடத்தில் கவனிப்பது உசிதம். வெளியிலிருந்து உட்புகுந்த வெள்ளைத்தோல்காரர்களைப் பழைமைக் குடிகளான கறுப்புத்தோல்காரருடைய வேறுபாடு மாதிரியார் என்று நினைப்பதில் இருக்கும் அஸத்தியத்தையும் தோஷத்தையும் முதன்முதலாக அது வெளிப்படுத்துகிறது; மேலும் இப்படிச் செய்வதில், உட்புகுந்த வெள்ளைத்தோலார் வெள்ளைத்தோலார் என்பதை மறந்து, அவரைப் பழைமைக்குடிகளான கறுப்புத்தோலாரின் வேறுபாடு மாதிரியார் என்று பாவித்து,

அக்கறுப்புத் தோலாரோடு ஸமாநமாகவே நடத்தி வருவதில் இருக்கும் அபாயத்தையும் அது புலப்படுத்து கிறது. எப்படி, வெளியிலிருந்து பெற்றுக்கொள்ளப் பட்ட பதங்களின் உச்சரிப்பைச் சேர்ந்த ஒலிவிசே ஷங்கள், அப்பதங்களைப் பெற்றுக்கொள்ளும் பாஷை யின் தன்மைக்கொத்த உச்சரிப்பு முறைகளை மாற்றக் கூடாதனவோ, அப்படியே, வெளியிலிருந்து பதங்களைப் பெற்றுக்கொள்ளும் பாஷைக்குரியனவான ஒலிவிசே ஷங்களும், அதனுல் வெளியிலிருந்து பெற்றுக்கொள் ளப்பட்டு, பிறகு வேண்டிய வையான உருவ மாறுபாடு களைப் பூர்ணமாய் அடைந்திராத பதங்கள் விஷயத்தில், செலுத்தத் தக்கனவல்ல, என்பது தான் மேற்கூறிய உபமாநத்திலிருந்து புலப்படும் பொருள்.

13. மேற்சொன்னதிலிருந்து, க, ச, ட, த, ப, என்னும் எழுத்துக்களுக்குச் சுத்த தமிழ்ச் சொற்களி லுள்ள ஒலி இலக்கணமானது, தமிழிலிருக்கும் வட சொல் திசைச்சொற்களில், உருவத்திலும் ஒலியிலும் முழுமையும் தமிழ் மயமாக்கப்பட்டவைகளில் மாத் திரமே பொருந்தும், என்று தெளிவாய் விளங்குகிறது. ஆனல் அரைகுறையாய்த் தமிழ் மயமாக்கப்பட்ட பதங்களின் விஷயத்தில், இம் மெய்யெழுத்துக்களான வை தங்களுக்குப் பதிலாய் மூலபாஷையில் அப்பதங் களிலுள்ள எழுத்துக்களின் ஒலிகளையே கூடியமட் டும் தமிழிலும் குறிக்கின்றனவென்றறிய வேண்டும். இந்த பொது விதிக்கு விலக்கே கிடையாது என்று எண்ணுவதற்கில்லை. செய்யுளில் எதுகை மோனை முத லிய தொடை இலக்கணங்கள் அமையவேண்டியிருக்கு மிடங்களிலும், மேலும்தமிழ் நாட்டிலேயே வெவ்வேறு

பாகங்களில் வார்த்தைகள் வெவ்வேறுவிதமாய் உச்சரிக்கப்படுவதிறுைம், மேற்கூறிய விதிக்கு விலக்குகள் வழங்கிவருவதை ஸாதாரணமாய்க் காணலாம். ஆனால் அவ்விதமான விதி விலக்குகளையெல்லாம், அவை விதிக்கு இன்னகாரணத்தினல் விலக்காய் உள்ளன என்று, உண்மையான பிரமாணத்தைக்கொண்டு, தெளிவாய்க்காட்டவேண்டியது; அவைகளை விதிவிலக்கான வழுவமைதியென்றே கருதவேண்டும். தமிழுக்கும் ஸம்ஸ்கிருதத்துக்கும் நெடுநாளாகக் கல்விப்பயிற்சி வழியில் ஸம்பந்தம் இருந்திருப்பதினல், தமிழ் அநேக வடசொற்களைப் பெற்றுக்கொண்டிருக்கிறது; என்றாலும் இதரபாஷைகளிலிருந்தும் கூட சிலபதங்கள் தமிழால் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. இந்த திசைச்சொற்களின் உச்சரிப்பு, அச்சொற்கள் முழுமையும் தமிழ்மயமாக்கப்பட்ட இடங்களில், சுத்த தமிழ் உச்சரிப்பு முறையின்படி அமையும். இன்றேல் அதுகூடிய மட்டும் மூலபாஷையில் உள்ளபடித் தான் அமையும்: (உ-ம்.) குமாஸ்தா (ஃகுமாஸ்தா), காடிகாநா (ஃகாடீகாநா), சமாதார் (ஜமாடார்), சிலேபி (ஜிலெபி), சங்கல் (ஜங்கல்), டால் (ஃடால்), டிகாணு (ஃடிகாணு), தபேதார் (ஃதவேஃதார்), தர்பார் (ஃதர்பார்), பந்தோபஸ்த் (ஃபந்தோபஸ்த்), பட்லர் (ஃபட்லர்), பிஸ்குத் (ஃபிஸ்கூத்). இந்த வார்த்தைகளில், சுத்த தமிழுக்குரிய உச்சரிப்பு முறை ஒரு சிறிதும் பயன்படாது, என்பது தானுகவே தெரியவருகிறது. ஸம்ஸ்கிருதமல்லாத வேறு பாஷைகளிலிருந்து தமிழால் எடுத்துக்கொள்ளப்பட்டு, தமிழில் சிறந்த நூல்களில் பிரயோகத்திலிருக்கிற வெளிச்சொற்கள் மிகவும் சிலவே. அப்படியிருந்தும், ஸம்ஸ்கிருதத்திலிரு

ந்து பெற்றுக்கொள்ளப்பட்டு, முழுமையும் தமிழ்மய மாக்கப்படாத வடசொற்களின் உச்சரிப்பைப்பற்றி, மேற்கூறிய முறையானது, இதரமான எந்த பாஷைகளி லிருந்தாவது பெற்றுக்கொள்ளப்பட்ட, அதேவிதமான வெளிச்சொற்களுக்கெல்லாம், பொருந்தியிருக்கும். உச்சரிப்புக் கிரமத்தைக் குறித்துக் கூறிய இந்த விதி, இதர பாஷைகளிலிருந்து பதங்களைப் பெற்றுக்கொண்டிருக்கும், பயிற்சி அடைந்த எல்லாப் பாஷைகளிலும், தழுவப்படுவதை ஸுலபமாய் நிதரிசனப்படுத்தலாம். இங்கிலீஷ் பாஷையிலுங்கூட, chaise, chivalry, depot, esprit, meerschaume, memoir, pique, recipe, rendezvous, Reuter, vermicelli, violoncello, முதலான பதங்களின் உச்சரிப்பினால், அம்முறைசெல்லுவதாக நாம் அறிந்து கொள்ளலாம். சில இங்கிலீஷ்க்காரர் சில ஸமயங்களில் முழுவதும் இங்கிலீஷ் மயமாக்கப்படாத இவ்விதமான பதங்களைச் சுத்த இங்கிலீஷ்ப்பதங்களைப் போலவே உச்சரிப்பதுண்டாயினும், அவ்விதமான உச்சாரணையானது முறைக்கொத்ததென்று சொல்லமுடியாது. அவர் இப்படி உச்சரிப்பதினால், வெளியிலிருந்து பெற்றுக்கொள்ளப்பட்ட பதங்களின் உச்சரிப்பைப் பற்றி, மேற்கூறிய விதி தவருகாது. அவருடைய உச்சரிப்புத் தான் விதிக்கு விலக்கானதாயிருக்கும். இப்படிக்கு விதிக்கு விலக்கான உச்சரிப்புங்கூட காலாந்தரத்தில் வெகு ஜனங்களுடைய ப்ரயோகத்தினால் முறைக்கு அமைந்ததாகவே ஏற்படலாம். அப்பொழுது கூட இது ஸாமாந்ய முறைக்கு விலக்கான வேருெரு முறையைத் தான் காட்டும். உச்சரிப்பில் மற்ருெரு விதமான தோஷம் என்னவென்ருல்—முழுமையும் தமிழ்மயமாக்கப்பட்ட

வடசொற்களையாவது திசைச்சொற்களையாவது தமிழாக்கப்படாதவைகளாகப் பாவித்து, அவற்றை மூல பாஷையி லுச்சரிக்கிறபடி உச்சரிப்பதேயாகும். ரீதி (ரீதி), ருசி (ருசி),என்னும் பதங்களைத் தத்ஸமரூபத்தில் உபயோகிக்கும்போது,அவற்றை ரீதி,ருசி,என்று உச்சரிக்கவேண்டுமே யொழிய, ரீஷி, ருஸி, என்று உச்சரிப்பது பிழையாகும். இப்பதங்களை இரீதி என்றும் உருசி என்றும் தத்பவரூபத்தில் வழங்கும்போது, அவற்றை இரீஷி என்றும், உருஸி என்றும், முறையே உச்சரிக்கவேண்டுமே யொழிய,இரீதி என்றும், உருவி என்றும் உச்சரிப்பது தப்பாகும். நீதி என்னும் இன்னொரு தகுதியான உதாரணங்கூட இங்கு கவனிக்கத் தக்கது. இந்த பதம் சுத்த தத்ஸமரூபத்தில் இருக்கின்றது; அது தனியாய் வழங்கும்போது, தகாத்திற்கு ஸம்ஸ்கிருதத்திலுள்ளபடி பருஷ த-கார ஒலியே உள்ளது. ஆனல் நீதிவழி, நீதிமார்க்கம், என்று இதர வார்த்தைகளோடு சேர்ந்து வழங்கும் கூட்டுப்பதங்களில், வழி என்கிற சுத்த தமிழ்ப்பதமானது, அதனோடு சேர்ந்த நீதி என்னும் ஸம்ஸ்கிருத பதத்தைத் தமிழ் மயமாக்கி, அதற்கு நீஷி என்கிற உச்சரிப்பைத் தருகிறது; மார்க்கம் (மார்கம்) என்கிற ஸம்ஸ்கிருத பதம், அதனோடு சேர்ந்த நீதி என்னும் இதே ஸம்ஸ்கிருத பதத்தில், ஒலி வேற்றுமையை உண்டாக்காமலிருப்பதினல், இப்பதம் நீதி என்று ஸம்ஸ்கிருதத்திலுள்ள மாதிரியாகவே உச்சரிக்கப்பட வேண்டியிருக்கிறது. ஆகவே இக்கூட்டுப் பதங்களை நீஷிவழி என்றும் நீதிமார்கம் என்றும் உச்சரிக்க வேண்டுமே யொழிய, நீதிவழி என்றும், நீஷிமார்கம் என்றும், உச்சரிப்

பது பெரும்பிழையும் இலக்கணவழுவு மாகும். என்ருலும், இந்த தப்பான உச்சாரணைகளைச் சரியென்று கூறுவாருமுளர், என்று நினைப்பதற்கு இடமுண்டு. வெளியிலிருந்து பெற்றுக் கொள்ளப்பட்ட திசைச்சொல் வடசொற்களின் உச்சரிப்பு, தமிழ்ப்பாஷையில் எவ்வளவு முக்கியமான விஷயமோ, என்பதை அறிந்து கொள்வதற்காக, ஒரே விதமான எழுத்துருவமுடைய பதங்கள் வெவ்வேறு விதமாய் உச்சரிக்கப்பட்டு, உச்சரிப்புக்குத் தக்கபடி அவைகளின் மூலத்திலும் பொருளிலும் வேறுபட்டிருப்பதைக் காட்டும், ஓர் அட்டவணை கீழ்க் கொடுக்கப்பட் டிருக்கிறது. தமிழ்ப்பாஷையின் கிரமமான உச்சரிப்பில் அக்கரையுள்ள கல்விமான்கள் எல்லோருக்கும், இந்த அட்டவணை அவ்விஷயத்தில் உண்மையை அறிவிப்பதற்கு உபகாரகமான தென்று, தென்படு மென்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆகையால் அதை அவர் நன்ருய் ஆழ்ந்து கவனிப்பாராக.

| எண் | பதம் | உச்சரிப்பு | மூலம் | பொருள் |
|---|---|---|---|---|
| 1. | அகம் | அமம் | ஸ. அம | மலை, மரம். |
| | | | ஸ. அவ | பாவம், தீட்டு. |
| | | அஹம் | தமிழ் | வீடு, உட்புறம். |
| 2. | அகதி | அமதி | ஸ. அமதி | திக்கற்றவன். |
| | | அஹதி | தமிழ் | ஓர்வகைமரம். |
| 3. | அந்தகன் | அந்தகந் | ஸ. அந்தக | யமன், கூற்றுவன். |
| | | அந்உகந் | ஸ. அந்யக | குருடன். |
| 4 | ஆகாரம் | ஆகாரம் | ஸ. ஆகார | உருவம், ஆஎன்னுமெழுத்து. |
| | | ஆஹாரம் | ஸ. ஆஹார | உணவு. |

| | | | | |
|---|---|---|---|---|
| 5. | கதை | கூ0ெஷ | ஸ. கூயா் | சரித்திரம். |
| | | ஶ0ெஷ | ஸ. ஶஷா | பெருந்தடி. |
| 6. | கணம் | கூணம் | ஸ. க்ஷணா | விநாடி. |
| | | | ஸ. கூணா | சிறுதுண்டு. |
| | | ஶணம் | ஸ. ஶணா | இனம். |
| | | கூண்டம் | ஸ கண்ட | கழுத்து. |
| 7. | கண்டம் | கண்ஷம் | ஸ. வண்ஷ | துண்டு, பாகம்; மாமிசம்; கற்கண்டு. |
| | | ஶண்ஷம் | ஸ. ஶண்ஷ | விபத்து. |
| 8. | கம்பம் | கம்வம் | ஸ. கம்வ | நடுக்கம், அசைவு. |
| | | கம்வம் | ஸ. ஸ்கம்ஶ | தூண். |
| 9. | கிரி | கிரி | தமிழ் | பிணையாளி. |
| | | ஶிரி | ஸ. ஶிரி | மலை. |
| 10. | கோடி | கோடி | ஸ. கோடி | நூறு லக்ஷம். |
| | | கோஷி | தமிழ் | புதுத்துணி; இருபதுகொண்ட எண்ணளவை. |
| 11. | சங்கம் | ஶங்கும் | ஸ. ஶங்வ | சங்கு. |
| | | ஶங்ஶம் | ஸ. ஸங்வ | கூட்டம். |
| 12. | சட்டை | ஶட்டை | தமிழ் | உடுப்பு. |
| | | ஶஜ்ஜை | ஸ. ஶ்ரஜ்ஜா | மரியாதை. |
| 13 | சடன் | ஶடந் | ஸ. ஶட | மூர்க்கன். |
| | | ஶஷந் | ஸ. ஜஷ | புத்தியற்றவன், சோம்பேறி. |
| 14. | சசி | ஶசி | ஸ. ஶசீ | இந்திரன்மனைவி. |
| | | ஶஶி | ஸ. ஶஶிந் | சந்திரன். |

| | | | |
|---|---|---|---|
| 15. சுகம் | ஶுகம் | ஸ. ஶுக | கிளி. |
| | ஸுகம் | ஸ. ஸுக | ஸௌக்கியம், இன்பம். |
| 16. சாதகம் | சாதகம் | ஸ. சாதக | ஓர்வகைப்பக்ஷி. |
| | ஸாதகம் | ஸ. ஸாதக | உபாயம். |
| | ஜாதகம் | ஸ. ஜாதக | ஜந்மபத்திரம். |
| 17. சாமம் | ஸாமம் | ஸ. ஸாமந் | ஸாமவேதம்; ஸமாதானம். |
| | க்ஷாமம் | ஸ. க்ஷாம | பஞ்சம். |
| | ஜாமம் | ஸ. யாம | மூன்றுமணிநேரப்பொழுது. |
| 18. சித்தம் | சித்தம் | ஸ. சித்த | மனம்,எண்ணம் |
| | ஸித்தம் | ஸ. ஸித்த | தயார். |
| 19. சகம் | ஶகம் | ஸ. ஶக | காலஅளவுவழி. |
| | ஜகம் | ஸ. ஜகத் | லோகம். |
| 20. சுத்தி | ஶுக்தி | தமிழ் | சிறுசம்மட்டி. |
| | | ஸ. ஶுக்தி | சிப்பி. |
| | ஶுத்தி | ஸ. ஶுத்தி | மாசின்மை. |
| 21. சோதனை | சோதனை | ஸ. சோதநா | ஏவுகை,தூண்டுகை. |
| | ஶோதனை | ஸ. ஶோதநா | பரிசுத்தப்படுத்தல். |
| 22. தளம் | தளம் | ஸ. ஸ்தல | தரை, நிலம். |
| | தளம் | ஸ. தல | சேனையிலோர் பாகம். |
| 23. தாதா | தாதா | (?) தமிழ் | பாட்டன். |
| | தாதா | ஸ. தாத்ரு | கொடையாளி. |

| | | | |
|---|---|---|---|
| 24. தாரை | தாரை | ஸ. தாரா | ஓர் நக்ஷத்திரம், ஓர் ஸ்திரீயின் பெயர். |
| | தாரை | ஸ. தாரா | நீர்பெய்தல். |
| 25. தானம் | தானம் | ஸ. ஸ்தாந | இடம். |
| | தானம் | ஸ. தாந | கொடை. |
| 26. தீரம் | தீரம் | ஸ. தீர | கரை. |
| | தீரம் | ஸ. தீர | தைரியம். |
| 27. தண்டி | தண்டி | தமிழ் | வரிதண்டுபவன். |
| | தண்டி | ஸ. தண்டிந் | ஓர்பிரசித்தி பெற்றஸம்ஸ்கிருத நூலாசிரியர். |
| 28. பந்து | பந்து | தமிழ் | உருண்டை. |
| | பந்து | ஸ. பந்து | உறவினன். |
| 29. பங்கம் | பங்கம் | ஸ. பங்க | சேறு. |
| | பங்கம் | ஸ, பங்க | அழிவு. |
| 30. பலம் | பலம் | ஸ.பல | ஓர் எடுத்தலளவை; ஒரு வீசையில் ஓர் பாகம். |
| | | ஸ பல | பழம். |
| | பலம் | ஸ. பல | வல்லமை. |
| 31. பத்தியம் | பத்தியம் | ஸ. பத்ய | இதமானஉணவு |
| | பத்தியம் | ஸ. பத்ய | செய்யுள். |
| | பத்தியம் | ஹிந்துஸ்தானி | படி. |
| 32. பத்திரம் | பத்திரம் | ஸ. பத்ர | இலை. |
| | பத்திரம் | ஸ. பத்ர | ஜாக்கிரதை. |

| | | | | |
|---|---|---|---|---|
| 33. | பாவம் | வாவம் | ஸ. வாவ | குற்றம். |
| | | ஸாவம் | ஸ. ஹாவ | எண்ணம்; அபிப்பிராயம். |
| 34. | பாணன் | ஸாணன் | ஸ. ஸாண | காதம்பரியின் [நூலாசிரியர். |
| | | வாணன் | தமிழ் | இசைபாடுவோன். |
| 35. | பாகம் | வாகம் | ஸ வாக | சமையல். |
| | | ஸாஹம் | ஸ. ஹாஹ | பங்கு. |
| 36. | பாதை | வாதை | (?) தமிழ் | சாலை, வழி. |
| | | ஸாதை | ஸ. ஸாதா | கஷ்டம், துன்பம். |
| 37. | பாதகம் | ஸாதகம் | ஸ. ஸாதக | துன்புறுத்தக்கூ[டியது. |
| | | பாதகம் | ஸ. பாதக | குற்றம் |
| 38. | பேடி | வேவி | தமிழ் | அலி |
| | | ஸேடி | ஹிந்துஸ்தானி | பெரியோரைக் [காண்பது. |
| 39. | மதம் | மதம் | ஸ. மத | கொள்கை. |
| | | மதம் | ஸ. மத | கர்வம், வெறி. |
| 40. | மந்திரம் | மந்திரம் | ஸ. மந்த்ர | வேதத்தின் ஓர்பா[கம், இரகசிய ஆலோசனை. |
| | | மந்திரம் | ஸ. மந்திர | வீடு. |
| 41. | வடம் | வடம் | ஸ. வட | ஆலமரம். |
| | | வடம் | (?) தமிழ் | கயிறு. |
| 42. | விகாரம் | விகாரம் | ஸ. விகார | மாறுபாடு; ஊனம். |
| | | விஹாரம் | ஸ. விஹார | விளையாட்டு; பௌ[த்தருடையமடம். |
| 43. | விபத்தி | விபத்தி | ஸ. விபத்தி | அபாயம்; துன்பம். |
| | | விபக்தி | ஸ. விபக்தி | வேற்றுமை. |

44. விருத்தம்
விருத்தம் ஸ. வ்ருத்த பாவகை; வட்டம்.
விருத்தம் ஸ. விருத்ய விரோதம்; பகை.

45. அங்கம்
அங்கம் ஸ. அங்க எண்; குறி.
அங்கம் ஸ. அங்க தேகம்; உறுப்பு.

14. மேல் காட்டிய பதங்களை எல்லாம் ஜாக்கிரதையாய் ஆராய்ந்துபார்த்தால், அரை குறையாய்த் தமிழாக்கப்பட்ட திசைச்சொல் வடசொற்களைச் சரியாய் உச்சரிக்கவேண்டிய விஷயம் உதாஸீனமாய் விட்டுவிடக்கூடாததென்பது, தமிழ்ப்பாஷையைப்பரிசீலனை செய்வதில் ஊக்கமுள்ள பண்டிதர்களுக்கு எளிதில் விளங்கும். கிரமமான உச்சரிப்பின் உத்தேசம் வாயால் சொல்லப்பட்டவார்த்தையின் பொருள் அதைக்கேட்குமவர்களுக்கு உடனே தெளிவாய்ப் புலப்படவேண்டுமென்பதே என்று ஸாமாந்யமாய் எல்லாரும் அங்கீகரித்திருப்பதாகச் சொல்லலாம். ஆயினும் சிலர் மேற்காட்டிய பதங்களும் மேலும் அவைகளைப் போலுள்ள இதர பதங்களும் சுத்த தமிழ்ப்பாஷைக்குரியதான ஒலிமுறையை அநுஸரித்தே உச்சரிக்கப்பட வேண்டுமென்றும், இம்மாதிரியான பதங்களெல்லாம் ஒரே ஒலியுருவங்கொண்டு பலபொருள்களைக்குறிக்கும் நாநார்த்தபதங்களாகக்கருதப்பட வேண்டுமென்றும், வாதிக்கலாம். கூறிய பொருளை எளிதாய்ப் புலப்படுத்தவேண்டியது எல்லாப் பாஷைகளுக்கும் இன்றியமையாத தன்மையாயிருக்கிறது; இத்தன்மையைப் போக்கடித்து, ஓர்பாஷையில் அநாவசியமாய் நாநார்த்த பதங்களை இவ்வாறு பெருக்

கிக்கொடுப்பது, தன்னிலே இச்சிக்கத்தக்கதா, அல்லது சாஸ்திரப் பிரகாரமாய் அங்கீகாரம் செய்யத் தக்கதா, என்பது கல்விமான்களால் நன்றாய்க் கவனித்துப் பக்ஷபாதம் இல்லாமல் ஆராய்ந்து பார்க்கத் தகுந்த விஷயமாயிருக்கிறது. மேலும் இலக்கணத்தைக் காட்டித்தாத் தக்கதாகிய வழக்குக்கு உள்ளதாயும் அதிக்கிரமிக்கக் கூடாததாயுமிருக்கும் வியவஹாரப் பிரமாணமுறையை இங்கு நாம் கவனிக்க வேண்டியதாயிருக்கிறது. வியவஹாரத்தில் வாழ்ந்துவருகின்ற பாஷைகளெல்லாவற்றிலும் போலவே, தமிழிலும் அதின் உச்சரிப்பானது, தமிழ் நாட்டுக்குள்ளடங்கிய தேச பேதத்தைப் பொருத்தும், அதைப்பேசுகின்ற ஜனக்கூட்டங்களின் ஆக்கம், பயிற்சி, நிலைமைகளைப் பொருத்தும், மாறுதலைப் பெற்றுள்ளது. தமிழ் நாட்டிலுள்ள தெற்கு ஜில்லாக்களில் வசிப்பவர்களும், ஸாமாந்யமாய்ப் பிராம்மணர் அல்லாத மற்ற வருணத்தார்களும், அரை குறையாய்த் தமிழாக்கப் பட்ட சில திசைச்சொல் வடசொற்களைச் சுத்ததமிழ்ச் சொற்களாகப் பாவித்து உச்சரித்து வருகிறதும்—அந்நாட்டிலேயே வடக்கு ஜில்லாக்களிலும் மேற்குஜில்லாக்களிலும் வசிப்பவர்களும், ஸாமாந்யமாய்ப் பிராம்மணர்களும் முழுவதும் தமிழ்மயமாக்கப்பட்ட சில திசைச்சொல் வட சொற்களை அவற்றின் பூர்வரூபங்களை அநுஸரித்து உச்சரித்து வருகிறதும்—பெரும்பாலும் வழக்கத்தில் இருக்கின்றன வென்று பொதுவாய்ச் சொல்லலாம். சடை (ஜடை) என்னும் பதத்தை ஜடை என்றும், சுகம் (ஸுகம்) என்னும் பதத்தை ஸுகம் என்றும் உச்சரிப்பதை படிக்கடி கேட்கிறோம். இவை தமிழ்ப்பதங்களின் தமிழ்த்தன்மையைக் குறைத்து உச்சரிக்கும் முறைக்குக் தக்க உதாரணகங்

ளாய் இருக்கின்றன. அங்ஙனமே அக்கினி (𑌅𑌗𑍍𑌨𑌿) என்பதை அக்கினி என்று உச்சரிப்பது முழுமையும் தமிழாக்கப்படாதவைகளான வெளிச் சொற்களுக் குரியதாகிய தமிழ்த்தன்மையை அதிகப்படுத்தி உச்சரிக்கும் முறையைக் காட்டுகிறது. அக்கினி பூ (𑌅𑌗𑍍𑌨𑌿𑌭𑍂) என்னும் கூட்டுச்சொல்லை அக்கினிவூ என்று உச்சரித்தால் எவரும் அக்கினிதேவனுடைய குமாரனாகிய சுப்பிரமணியர் என்று அது பொருள் படுவதை யறிந்துகொள்ளாமல், தமிழிலக்கணத்தை அநுஸரித்தபடி இக்கூட்டுச் சொல்லில் பகரம் இரட்டித்திராவிடினும், இப்பதம் தமிழ் நாட்டில் அப்பெயர் கொண்டதாகிய ஏதோ ஓர் புஷ்பத்தைக் குறித்துக் காட்டுவதாக எண்ணிக்குழப்பமடையலாம். அகணித - கணநம் (𑌅𑌗𑌣𑌿𑌤 - 𑌗𑌣𑌨𑌂) என்பதை அஹணித - ஹணநம் என்றும், அகடித - கடநம் (𑌅𑌘𑌟𑌿𑌤 𑌘𑌟𑌨𑌂) என்பதை அஹடித ஹடநம் என்றும் உச்சரிப்பது தமிழில் வழங்கும் வெளிப்பதங்களின் தமிழ்த் தன்மையை அதிகப்படுத்தி உச்சரிப்பதைக்காட்ட மிதிமீறின மாதிரியான உதாரணங்களாய் இருக்கின்றன. ஆயினும், வாய் வழியாய் வெளிப்படும் வார்த்தைகளையெல்லாம் எளிதில் பொருள்படுமாறு உச்சரிப்பதே எங்கும் கிரமமான உச்சரிப்பு, என்னுமுண்மையைப் பாராட்டாமல், மேல் காட்டியபடி மிதிமீறின தப்பு உச்சரிப்புகள் கூட, சில அறிஞர்களால் தக்க உச்சரிப்புகளென்று காட்டப்படுவதும் உண்டு. தமிழில் வழங்கும் சொற்கள் விஷயத்தில், மேற்காட்டியவாறு அவைகளின் தமிழ்த் தன்மையைக் குறைப்பதென்பதும் அதிகப்படுத்துவதென்பதுமாகிய இரண்டு விதமான உச்சரிப்புக் குற்றங்களையும் எல்லோரும் வெகு

ஜாக்கிரதையாய்ப்பார்த்து விட்டொழியவேண்டும் தமிழ்ப்பாஷையின் தன்மை முழுவதையும் ஆராய்ந்து அறிய முயலும் அறிஞர்கள், அப்பாஷைக்கு வெளியிலிருந்து வந்திருக்கும் பதங்களின் உச்சரிப்பு முறையை நிச்சயப்படுத்திக் கொள்வதற்கு முன், எல்லாப் பாஷைகளிலும், வெளியிலிருந்து பெற்றுக்கொள்ளப்பட்டு அபூக்ஷணமாய் உருவமாறுதலையடைந்திருக்கும் பதங்களின் உச்சரிப்பைச்சேர்ந்துவரும்,ஒலிமாறுட்டத்தின் ஸாமாந்யமான போக்கை மனதில் வைத்துக் கொண்டிருக்க வேண்டும். உச்சரிப்பின் தமிழ்த் தன்மையை அதிகப்படுத்துவதிலாவது குறைப்பதிலாவது நமக்குள்ள பக்ஷபாதத்தைக்கொண்டு ஒரு பக்கத்தில் பதங்களின் உச்சரிப்புக்கும் மற்றொரு பக்கத்தில் அவைகளின் உற்பத்திக்கும் பொருளுக்கும் இயற்கையாயிருக்கும் பரஸ்பர ஸம்பந்தத்தை நாம் மறந்துவிடக்கூடாதென்பது, இங்கு முக்கியமாய்க் கவனிக்க வேண்டியதாகிய வேறொரு விஷயமாய் இருக்கிறது. தமிழ்ப் பாஷையிலுள்ள சுத்த தமிழ்ப்பதங்களின் உச்சரிப்பில் கூட, முன் கூறியவாறே இடத்திற்கு இடம் வித்திபாஸங்கள் இருப்பதைக் காணலாம் இரட்டித்த வல்லினறகரத்தின் உச்சரிப்பு இந்த மாதிரி பேதப்படும் உச்சரிப்புகளுள் ஒன்று. பற்று, குற்றம், முதலிய வார்த்தைகளில் இரட்டித்த வல்லின றகரம் தமிழ் நாட்டின் தென்கோடியில் பட்டு, குட்டம், என வெகுவாய் இரட்டித்த டகரம்போல உச்சரிக்கப்படுகின்றது; ஆனால் அந்நாட்டின் மத்திய ப்ராந்தங்களிலும் வடபாகங்களிலும் இந்த ஒலி இரட்டித்த தகர ஒலியை ஒத்து, இப்பதங்கள் பத்து, குத்தம், என்னும் பதங்களைப்போல

உச்சரிக்கப்படுகின்றன. சரியான உச்சாரணை இதுதா னென்று இப்போது சொல்லமுடியாதாயினும், அது இவ்விரண்டு ஒலிகளுக்கும் நடுத்தரமாயிருக்கவேண்டு மென்றும், அப்படியிருந்தும், இரட்டித்த தகரத்தின்ஒலி யைப்பார்க்கிலும் இரட்டித்த டகரத்தின் ஒலியையே கொஞ்சம் அதிகமாக ஒத்திருப்பதாகவும் நினைக்கலாம். தமிழுக்கே உரித்தாயுள்ள ழகரவெழுத்தின் உச்சரிப் பிலும் இடத்திற்கு இடம் பேதம் இருக்கின்றது. என்ற லும், அதின் உண்மையான உச்சரிப்பு, தெரிந்துகொள்ள முடியாத அவ்வளவு, அரிதாகி விடவில்லை. தமிழ் நாட் டில் அநேக பாகங்களில், இவ்வெழுத்து ளகாத்தைப் போலவே உச்சரிக்கப்படுகிறது. வாழைப்பழம் என் கிற வார்த்தை சரியாய் எழுதப்பட்டிருந்த போதிலும், வாளைப்பளம் என்று உச்சரிக்கப்படுகின்றது. கிராம்ய ஜநங்களாகிய கீழோர் இவ்வார்த்தையை விகாரப்படுத்தி வாயப்பபம் என்று உச்சரிப்பதுமுண்டு. கந்நட பாஷை யில் இவ்வெழுத்தை நேராக ஒத்திருக்கிற எழுத்தா னது ளகர ஒலியையே அடைந்து விட்டிருக்கிறது. ஆனபோதிலும், ழகரத்திற்குப் பிரத்தியேகமான ஒலி ஒன்று இருக்கிறது என்பதாய்க் கண்டறிந்துகொள்ளக் கூடிய உண்மையானது, உச்சரிப்பு விஷயத்தில் இடத் திற்கிடம் உள்ள வேறுபாடுகள் அதற்குரிய முறை களை நிச்சயப்படுத்தும்ஆதாரங்களாக இருக்கக்கூடாது, என்னும் நியாயத்தை வற்புறுத்துகின்றது. இதர பாஷைகளில் இல்லாமல் தமிழ் உச்சரிப்பில் மாத்திரம் காணப்படுகிற மற்றோர் ஒலியாதெனில், அது குற்றிய லுகரம். இதன்பொருள் குறுக்கப்பட்ட அல்லது சுருக் கப்பட்ட உகரம். தாது, சம்பு, என்னும் தத்ஸம வட

சொற்களின் ஈற்றிலுள்ள உகாத்தின் ஒலியை, கறுப்பு, மார்பு, என்னும் சுத்த தமிழ்ச்சொற்களின் ஈற்றிலுள்ள உகாத்தின் ஒலியோடும், அச்சு, வயது, என்னும் தமிழாக்கப்பட்ட வட சொற்களின் ஈற்றிலுள்ள உகாத்தின் ஒலியோடும் ஒத்துப்பார்த்தால், குற்றியலுகாத்தின் ஒலியிலுள்ள சுருக்கம் இன்னது என்று வெளியாகும். மேலும், தமிழ்ப் பாஷையினுல் பெற்றுக்கொள்ளப் பட்டு அரைகுறையாய்த் தமிழ் மயமாக்கப்பட்ட வெளிச் சொற்களில் சுத்த தமிழுக்கே உரிய ஒலி விசேஷங்கள் யாதும் அநுஸரிக்கப்படக்கூடாதென்னும் நியாயமும் இவ்வுதாரணங்களிலிருந்து விளங்கும். தமிழில் மாத்திரம் காணப்படுகிற மற்றொரு எழுத்து ஆய்தம் என்று சொல்லப்படும் (ஃ). இதன் ஒலி ஸம்ஸ்கிருதத்தில் ஜிஹ்வாமூலீயம் என்று சொல்லப்படும் விஸர்க்க விகாரத்தினுல் குறிக்கப்படக்கூடியதாக நினைக்கலாம். ஆய்தவெழுத்து தமிழ்ப் பாஷையில் அதிகமாய் உபயோகிக்கப்படுவதில்லை; செய்யுளைத் தவிர்த்து, வழக்கில் கூடுமான வரையிலும், இவ்வெழுத்தை உபயோகிப்பதே கிடையாது.

15. மேற்கூறியதிலிருந்து, உச்சாரணை என்னும் விஷயமானது தமிழ்ப் பாஷையில் எவ்விதமானதென்றும், அதைக் கவனிப்பது எவ்வளவு முக்கியமானதென்றும் நன்றாய் அறியவந்திருக்கலாம். இனி, அப்பாஷையின் உச்சரிப்பில் உண்டாகக்கூடிய பிழைகளையும் ஸந்தேஹங்களையும் எழுத்துகளைக்கொண்டு கூடுமான வரையிலும் நீக்குவதற்குத் தகுதியான அக்ஷாமாலையை ஏற்படுத்துவது எவ்வளவு உபகாரகமாயிருக்குமென்பதைத் தெளிவாய்த்தெரிந்துகொள்ளவேண்டும்.

ஒரு பாஷையைக் கற்பவர்கள் அப்பாஷையிலுள்ள பதங்களை நன்ருகவும் திருத்தமாகவும் உச்சரிக்கும்படி, அவர்களுக்கு உதவிபுரிவது அப்பாஷைக்காக ஏற்படுத்தப்பட்ட அகராதியின் முக்கிய இலக்கணங்களில் ஒன்ருயிருக்க வேண்டுமென்பதைப்பற்றி, இக்காலத்தில் ஸாமாந்யமாய் யாரும் ஸந்தேஹப்படமாட்டார்கள். மலையாளம், கந்நடம், தெலுங்கு ஆகிய பாஷைகளைப்போலவே தமிழ்ப் பாஷையும் ஸம்ஸ்கிருத பாஷையிலுள்ள ஒலிகளெல்லாவற்றையும் தான் பெற்றுக்கொண்டு, அதற்குத்தகுந்தபடி தன் அக்ஷர மாலையையும் சரிப்படுத்திக்கொண்டிருந்தால், தமிழால் பெற்றுக்கொள்ளப்பட்ட வெளிப்பதங்களின் உச்சரிப்பு விஷயத்தில் இப்போது தென்படும் அநிச்சயமும் கலப்பும் உண்டாவதற்கு இடமிராது. தமிழ்ப் பாஷையானது தனக்குரிய பதராசியை அபிவிருத்தி செய்துகொள்வதற்காக ஸம்ஸ்கிருத வார்த்தைகளையும் பிராகிருத வார்த்தைகளையும் தடையில்லாமல் அபரிமிதமால் பெற்றுக்கொண்டிருப்பதினுலும், ஜைநர்களாலும் வைஷ்ணவர்களாலும்மணிப்ரவாளநடையில் எழுதப்பட்டசிறந்த கிரந்தங்கள் அநேகமாய் தமிழிலிருப்பதினுலும், ஸம்ஸ்கிருதத்திற்கே உரியனவான பல ஒலிகளைத் திருத்தமாய்க் குறிப்பதின் நிமித்தம் தகுதியான எழுத்துக்களைத் தமிழ்ப்பாஷை தன் அக்ஷரமாலையில் ஏற்றுக்கொள்ள வேண்டியது அவசியமாயிருக்கிறது; அப்படி ஏற்றுக்கொள்ளாவிட்டால், தமிழால் பெற்றுக்கொள்ளப்பட்டிருக்கிற திசைச்சொல் வடசொற்களின் உச்சரிப்பைப்பற்றி அடிக்கடி உண்டாகின்ற பிழைகளையும் ஸந்தேஹங்களையும் திருப்திகரமாய் நிவிர்த்தி

செய்து, அவை மேலும் மேலும் தோன்றுதபடி காத்துக்கொள்வது கஷ்டமான காரியமாகும். ஸம்ஸ்கிருதமல்லாத இதர பாஷைகளிலிருந்தும் கூட தமிழ்ப்பாஷையானது சில வெளிப்பதங்களைப் பெற்றுக்கொண்டிருக்கிறது. தென்னிந்தியாவில் தற்காலத்தில் சென்றுவரும் பயிற்சியினாலும் நாகரீகத்தினாலும், தமிழ்ப்பாஷையானது, தன்னையறியாமலே இயல்பாக, இதர பாஷைகளிலிருந்து மேன்மேலும் வார்த்தைகளைப்பெற்றுக் கொள்ளவேண்டியதாய் ஏற்பட்டிருக்கிறது. கிரந்த அக்ஷரங்களைக்கொண்டு தமிழ் அக்ஷரமாலையைப் பூர்த்திசெய்வதென்றால், கிரந்தத்தில் ஸம்யுக்தாக்ஷரங்களென்னும் கூட்டெழுத்துகளை உண்டாக்கும் விதமானது எளிதாயில்லாமலிருப்பதினால், அப்படி செய்வது உசிதமாயிராது. தமிழக்ஷரமாலையைக் கொண்டு கூட்டெழுத்துக்கள் எளிதாயுண்டாக்கப்படலாமென்பது எல்லாருக்கும் நன்றாய்த் தெரிந்த விஷயந்தான். ஆகையினால் அதிலுள்ள ஒலிவிசேஷங்களைப் பெருக்கி உச்சரிப்பைச் சீர்திருத்த முயலும்போது, கூட்டெழுத்தையுண்டாக்கும் விஷயத்தில் அதற்குரிய தான இந்த ஸௌகரியத்தை மறந்துவிடக்கூடாது. இதற்கெல்லாமேற்றபடி, தமிழில் ஏற்கனவே உள்ள எழுத்துக்களை ஆதாரமாகக்கொண்டே தமிழ்ப்பாஷைக்கு ஏறக்குறைய பூர்த்தியான ஒருபுது அக்ஷரமாலை இங்கு காட்டப்பட் டிருக்கிறது. அறிஞர்கள் அதனை நன்றாய்க் கவனித்து ஆதாவுடன் விசாரிப்பாராக. இந்தப் புதுஅக்ஷாமாலையை ஆராய்ந்து பார்த்தால், அதில் தமிழில் முன்னமேயுள்ள எழுத்துக்களெல்லாம் அப்படியே எடுத்துக்கொள்ளப்பட் டிருக்கின்றன வென்ப

தும், ஸம்ஸ்கிருத பாஷையிலிருந்தும் அதல்லாத இதர பாஷைகளிலிருந்தும் பெற்றுக்கொள்ளப்பட்டிருக்கிற வார்த்தைகளைத் தவறின்றி எழுதுவதின் பொருட்டும் உச்சரிப்பதின் பொருட்டும் தேவையான சில புது அக்ஷரங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன வென்பதும், புலப்படும். ஸம்ஸ்கிருத பாஷையிலுள்ள ஃ, ஞ, என்னும் உயிரெழுத்தொலிகளைக் குறிப்பதற்கு, ரகா-லகரங்களிலிருந்து உண்டாக்கப்பட்ட இரண்டு புது எழுத்துக்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன; அப்படியே ஸம்ஸ்கிருதத்திலுள்ள அநுஸ்வாரம், விஸர்க்கம், ஆகிய இவற்றின் ஒலிகளைக் குறிப்பதற்கு, இதர திராவிடய பாஷைகளிலுள்ளவாறு, ०, ः, என்னும் எழுத்துக்குறிப்புகள் கூட்டப்பட்டிருக்கின்றன. மேலும் க, ச, ட, த, ப, என்னும் ஐந்து மெய்யெழுத்துகளுக்குள்ள பல்லொலித்தன்மையை நீக்குவதற்காகவும், அவைகளின் ஸாளரூபங்களையும் ஒத்தோடு கூடிய ஒலிகளையும் குறிப்பதற்காகவும், இவ்வைந்தெழுத்துக்களில் ஒவ்வொன்றையும் ஆதாரமாகக்கொண்டு, அவைகளில் ஒவ்வொன்றுக்கும் மும்மூன்றாக, மொத்தத்தில் பதினைந்து புது எழுத்துக்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இவைகளில் ஒவ்வொரு எழுத்திலும் தகுந்த இடத்தில் ஒரு சுழியைக்கூட்டி வரைவதினால் அவ்வெழுத்திற்குரிய ஸாளமான ஒலி காட்டப்படுகிறது; தெனுங்கு, கந்நட, பாஷைகளிற்போல, வேண்டிய எழுத்திற்கடியிலே கீழ்முகமாக ஒரு கோட்டை வரைவதினால் அவ்வெழுத்திற்குள்ள ஒத்தோடுகூடிய ஒலி காட்டப்படுகிறது. இப்படிச்செய்வதினால், இயற்கையான ஒற்றுமையுள்ள எழுத்தொலிகளைக் குறித்துக்காட்டுவ

தற்கு, அதுபோலவே ஒற்றுமையுள்ள வரிவடிவங்க ளும் ஏற்படுகின்றன. இதனுல் தமிழெழுத்துகளைக்கற் றுக்கொள்வதில் அவ்வொற்றுமையைக் கொண்டதான ஒரு ஸௌகரியமும் கூட உண்டாகும். இவ்விதமான ஒற்றுமையை இழந்து விடாமலிருப்பதற்காகவே, ஸா ளாக்ஷாங்களிலொன்றுகிய ஜகாரத்தின் ஒலியைக் குறி க்க, இந்தப் புது அக்ஷரமாலையில் கிரந்தத்திலுள்ள ஜ உபயோகிக்கப்படவில்லை. இதுவுமன்றி தமிழிலுள்ள ககாரத்திற்கும் கிரந்த ஹகாரத்திற்கும், அப்படியே தமிழின் சகாரத்திற்கும் கிரந்த ஸகாரத்திற்கும், சில வேளையில் தென்படும் ஒலியொற்றுமையைப் புலப்படுத் தும்பொருட்டே, இந்த கிரந்த அக்ஷாங்கள் தமிழில் ஏற்கனவே உபயோகத்தில் இருந்தபோதிலும், அவை களின் உருவங்கள், தமிழிலுள்ள ககா-சகாரங்களுக்கொ த்தபடியிருக்க வேண்டியதற்காக, சிறிது மாறுதலோடு காட்டப்பட்டிருக்கின்றன. மேலும் பிரயோகத்தில் இக் காலத்தில் வேண்டியதாய் வந்துகொண்டிருக்கிற f, z, என்னும் இங்கிலீஷ் எழுத்துகளின் ஒலிகளைக்குறிப்ப தற்குத் தகுந்த எழுத்துகளும் உண்டாக்கப்பட்டிருக்கி ன்றன. இவற்றில் f என்பதைக்குறிக்கும் வடிவம் ஒத் தோடுகூடிய பகார-ஒலியைக்காட்டுமெழுத்திலிருந்தும் z என்பதைக்குறிக்கும் வடிவம் ஸகார ஒலியைக்காட்டும் எழுத்திலிருந்தும் முறையே உண்டுபண்ணப்பட்டிருக் கின்றன. ஆனுல், ஸ, ஷ, என்னும் கிரந்த அக்ஷரங்களின் ஒலியைக்காட்டுவதற்கு அந்த கிரந்த அக்ஷாங்களே உப யோகிக்கப்பட்டிருக்கின்றன. இப்புது அக்ஷரங்களெல் லாம் இப்பொழுது தமிழிலுள்ள எழுத்துகளைப் போல வே, எளிதாய்க் கோர்த்தெழுதுவதற்கிசையும்படி

உண்டு பண்ணப்பட்டிருக்கின்றன வென்னுமுண்மை, எழுதிப்பார்த்தால் தெளிவாய்த்தெரியவரும். மேலும் இப்புது எழுத்துகளை உண்டாக்குவதில், அவ்வெழுத்துகள், தமிழுக்கு நெருங்கின ஸம்பந்தமுடைய பாஷைகளிலுள்ள வேறு யாதொரு எழுத்துகளோடும் ஒத்தனவென்று, மயங்க இடமில்லாதபடி இருக்கவேண்டுமென்றும், கவனம் செலுத்தி இங்கு முயலப்பட்டிருக்கிறது.

16. இந்தப்புது அக்ஷரமாலையின் சிறப்பு இதர விஷயங்களில் எவ்வாறாயினும் ஆகுக; தமிழில் வழங்குகின்ற சுத்த தமிழ்ச் சொற்கள், வடசொற்கள், திசைச்சொற்களாகிய எல்லாவிதமான சொற்களையும் பிழையில்லாமல் உச்சரிப்பதற்கு வேண்டி யிருக்கும் எல்லா ஒலிவடிவங்களையும் குறித்துக் காட்டுவதற்குத் தகுதியான வரிவடிவங்கள் இவ்வக்ஷரமாலையில் உள்ளன என்பது, அதைப்பரிசோதித்துப்பார்த்தால், தானாகவே தெரியவரும். தமிழ்ப்பாஷைக்குரியதான எந்த ஒரு பரிபூர்ணமான அகராதியை ஆராய்ந்துபார்த்தபோதிலும், அப்பாஷையைச்சேர்ந்த பதராசியில் ஸம்ஸ்கிருதத்திலிருந்தும் பிராகிருதத்திலிருந்தும் பெற்றுக்கொள்ளப்பட்ட பதங்கள் கணக்கில் மிகுதியாய் இருக்கின்றன, என்பது நன்றாய்த்தெரியவரும். லாட்டின் பாஷையானது இங்கிலீஷ்ப் பாஷையின் பதராசிக்குத் தன் பதங்களைக் கொடுத்திருப்பதைப்பார்க்கிலும், தமிழ்ப் பாஷையின் பதராசிக்கு ஸம்ஸ்கிருத பாஷையானது மிகவும் அதிகமான பதங்களைக் கொடுத்திருக்கிறதென்பது சுலபமாய் அறிந்துகொள்ளக்கூடியவிஷயம். இங்கிலீஷ்ப் பாஷையானது லாட்டின் பாஷையிலிருந்து

எப்படி நேராகவும் நார்மன் - ப்ரெஞ்சு வழியாகவும் பதங்களைப்பெற்றுக் கொண்டிருக்கிறதோ, அப்படியே தமிழ்ப் பாஷையுங்கூட ஸம்ஸ்கிருத பதங்களை நேராக வும் பிராகிருத வழியாகவும், ஆகிய இரண்டு மார்க்கங் களிலும், பெற்றுக்கொண்டிருக்கிறது. ஆகையால், இங்கி லீஷ்ப் பாஷையிலுள்ள அநேக பதங்களின் உற்பத்தி யைப்பற்றியும் உச்சரிப்பைப்பற்றியும் லாட்டின் பாஷைக்கு ஏற்பட்டிருக்கும் ஸம்பந்தத்தின் தன்மை யையும் உண்மையையும் மறந்து விடுவதினால், ஓர் இங் கிலீஷ் அகராதியின் தவறின்மைக்கும் இலக்கணச் சிற ப்பிற்கும் எவ்விதமான அபாயம் நேரிடக்கூடியதோ, அப்படியே, தமிழ்ப் பாஷையிலுள்ள அநேக பதங் களின் உற்பத்தியைப்பற்றியும் உச்சரிப்பை பற்றியும் ஸம்ஸ்கிருத பாஷைக்கு ஏற்பட்டிருக்கும் ஸம்பந்தத் தின் தன்மையையும் உண்மையையும் மறந்துவிடுவதி னால், அதனிலும் அதிகமான அபாயமானது ஸலக்ஷண மான ஒவ்வொரு தமிழகராதியின் பிரயோஜநத்திற்கும் உபகாரத்திற்கும் நேரிடக்கூடியதென்பதில் யாதொரு ஸம்ஶயமுமிருக்க இடமில்லை இக்காரணத்துக் காகத்தான், இங்கு புதிதாய்க்காட்டியிருக்கும் அக்ஷர மாலையானது ஸம்ஸ்கிருத பாஷைக்கு இயற்கையா யுள்ள ஒலிகளையும், அப்படியே தமிழ்ப் பாஷைக்கு இயற்கையாயுள்ள ஒலிகளையும், குறித்துக் காட்டுவ தற்கு வேண்டியனவான வரிவடிவங்களை யெல்லாம் பெற்றிருக்கும்படி செய்யப்பட்டிருக்கிறது. தமிழ்ப் பாஷையையும் அதிலுள்ள நூல்களையும் இலக்கணப் பொருத்தமாய் ஆராய்ந்து அறிந்திருக்கும் கல்விமான் கள், இச்சிறு புத்தகத்தில் விசாரித்திருக்கும் விஷயங்

களை, அவைகளுக்குத் தம்மிலே இருக்கும் பெருமைக் கொத்தபடி, கவனிப்பாரென்பதை உறுதியாய் நம்பலாம். மேலும் அவர்கள் தங்களுடைய அறிவினலும் ஆலோசனையினலும் விமரிசனத்தினலும், தமிழ்ப் பயிற்சியைச் சேர்ந்த விவரங்களை வெளியிடுவதில், உண்மையையும் தவறின்மையையும் காப்பாற்றிக் கொடுத்து, அப்பயிற்சி இடைவிடாமல் மேன்மேலும் அபிவிருத்தியடையும்படி செய்து கொடுக்க உதவிபுரிவாரென்றும் அஞ்சாமல் விரும்பலாம்.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 10 | கடைசி | உபமேய | உபமேயா |
| 38 | ,, | ஜாஹாஷ்ஷ | ஜாஹாவ்ஸ |
| 42 | 22 | ஷடர் | ஷட்ரர் |
| 49 | கடைசி | விஹத்தி | விஹக்தி |
| 51 | ,, | உதாரணகங் | உதாரணங்க |
| 53 | 6,7 | அபூக்ணமாய் | அபூர்ணமாய் |
| 56 | 17 | அபரிமிதமால் | அபரிமிதமாய் |